# திராவிடன்

ஆசிரியர்: என்.வி. நடராசன்.

மாலை : 9 11—11—55 : வெள்ளி : : விலை 3 அணு மலர் : 13


## மந்திரி [illegible]

### இதென்ன புது [illegible]

### போகாத ஊருக்குப் புரியாத பாதை [illegible]

சாதாரணமாக ஒரு ஊரிலேயோ அல்லது பொது நிறுவனங்களிலேயோ ஏற்படும் தகராறுக்குரிய பிரச்னைகளில் அதற்கு சம்பந்தப் பட்ட இரு சாராரிடையே கூடுமான அளவு புத்தி இருந்தால் அதைத்தீர்த்துக் கொள்ளும் வழிவகையும் மிக எளிதாக அமைந்துவிடும்.

ஆனல் தகராறுக்குக் காரணமானவர்களில் ஒரு சாரார் எவ்விதத்திலும் அதை ஒழுங்காக முடிய வி-க் கூடாது என்று குறும்புத்தனம் காட்டினுல், அப்பிரச்னை நீடித்துக் கொண்டே செல்வதில் ஆச்சரியமில்லை.

இவ்விதம் குறும்புத்தனம் காட்டுவோர், சம்பந்தப்பட்ட பிரச்னையின் மீது தங்களின் எண்ணத்தைத் தெரிவிக்க மாட்டார்கள், அதை அடியோடு மறைத்துவிட்டு, தங்களின் பாட்டனும் தங்களுக்கு மாறுபட்டவர்களின் பாட்டனும் கொண்டிருந்த தகராறைப்பற்றி வீண் கேள்விகளை எழுப்புவர்! அதாவது சம்பந்தப்பட்ட பிரச்னையை விவாதத்திற்கு எடுத்துக் கொள்ளாமல் தடுப்பதற்கும், காலத்தை வீணுக்குவதற்கும், சந்தர்ப்பப்பட்டால் தங்களுக்கு மாறரின் பொறுமையை அளவுக்கு மீறி சோதித்த குழப்பமுண்டாக்குவதற்கும் செய்யப்படும் சூழ்ச்சியாகும். தங்களின் பித்தலாட்டம் மறைக்கப்படுவதற்கு இவ்வித மட்டரகமான செயலில் இறங்கும் பேர்வழிகளின் திருவிளையாடலை நாட்டுப் பிரச்னை களிலிருந்து வீட்டுப் பிரச்னைகள் வரை காணலாம்!

●

சென்னை — ஆந்திர எல்லையிலுள்ள சித்தூர் மாவட்டத் தமிழ்ப் பகுதிகள் தமிழகத்துடன் சேர வேண்டும் என்ற பிரச்னை சென்ற இரண்டு ஆண்டுகளாக தி. மு. கழகம் உள்ளிட்ட மற்றும் சில கட்சிகள் திட்டவட்டமாகத் தெரிவித்திருப்பதையும் சில சமயங்களில் தீவிர கிளர்ச்சிகளில் ஈடுபட்டதையும் பொதுமக்கள் அறிந்ததேயாகும்.

ஆனல், அரசியல் கட்சிகள் எதுவும் இப்பிரச்னையில் கிளர்ச்சி செய்ய வேண்டியதில்லை யென்றும், ஆந்திர—சென்னை சர்க்கார்களே நேச முறையில் கலந்து பேசி தமிழகத்துக் குரித்தான பகுதிகளைத் தமிழகத்துடன் சேர்ப்பதில் நல்ல முடிவு காணுவர் என்றும் உறுதி யளித்தனர்.

கிளர்ச்சி நடத்தித்தான் ஒவ்வொரு பிரச்னையிலும் முடிவு காண வேண்டுமென்பது தி. மு. கழகத்தின் எண்ணமல்ல, கூடுமான அளவு சம்பந்தப்பட்டவர்கள் கலந்து பேசி முடிவு காண்பது எதிர்காலத்தின் நல்லுறவுக்கும் வழிகாணும் என்ற எண்ணத்தின் மீது—சென்னை—ஆந்திர அமைச்சர்களின் பேச்சு வார்த்தை வரை, சித்தூர் பிரச்னையில் எதொரு கிளர்ச்சியையும் செய்ய வேண்டியதில்லையென்ற வேண்டுகோளை தி. மு. கழகமும், ஏற்றுக் கொண்டது.

ஆனல், இந்த இடைக் காலத்தில் சித்தூர் தமிழ்ப் பகுதிகள் தமிழகத்துடன் சேர வேண்டுமென்பதற்கான நியாயமான விளக்கங்களை, புள்ளி விவரங்களை, வேண்டுகோளை மாநாட்டின் வாயிலாகவும் மற்றும் கழக ஏட்டின் மூலமாகவும் இரு சர்க்காருக்கும் எடுத்துக் காட்டி வந்துள்ளது தி. மு கழகம்.

சென்னை அமைச்சர்களும் அதுபோலவே ஆந்திர அமைச்சர்களை அணுகுவதும் இப்பிரச்னை குறித்து ஜாடைமாடையாகப் பேசுவதுமான துவக்க வேலைகளில் ஈடுபட்டு, இறுதியாக சென்ற வாரம் அப்பிரச்னையில் முடிவு காணுவது என்று திட்டமிட்டு, சென்னை சர்க்கார் மாளிகையில் ஆந்

நக்கீரன்

திர முதலமைச்சர் கோபால ரெட்டி அவர்கள் அவரது சகா மந்திரிகளுடனும், அது போலவே காமராசர் அவர்கள் தமது துணை மந்திரிகளுடனும் கலந்து பேச ஆரம்பித்தனர்!

இந்த இரு சர்க்காரும் பேசுவதற்கு எடுத்துக் கொள்ளப்பட வேண்டிய பிரச்னை சித்தூர் மாவட்டத்திலுள்ள தமிழ்ப் பகுதிகளைப் பொறுத்ததேயன்றி வேறு பிரச்னைகளல்ல என்பது நாடறிந்த உண்மையாகும்.

ஆனல், இந்த இரு சர்க்கார் அமைச்சர்களின் மாநாட்டின் பேச்சு வார்த்தையின் துவக்கத்திலேயே வந்த விவகாரத்தை மறைத்துவிட்டு விவேகமற்ற பேச்சில் இறங்கினராம் ஆந்திர அமைச்சர்கள்

சேலம் மாவட்டத்திலுள்ள ஒசூர் தாலுக்கா, ஆந்திர மாநிலத்துடன் சேர்க்கப்பட வேண்டும்—அதற்கு என்ன பதில் கூறுகிறீர்கள், இதில் நீங்கள் எங்களுக்குத் திருப்தியான பதிலைக் கூறினுல் சித்தூர் மாவட்டத்தில் ஏதோ ஒரிரு தாலுக்காக்களைத் தருவதற்கு 'நாங்கள் சம்மதிப்பதற்கு யோசிக்க முடியும். எனவே என்ன பதில் கூறுகிறீர்கள் என்று சென்னை மாநில அமைச்சர்களைக் கேட்டனராம் ஆந்திர அமைச்சர்கள்!

ஆந்திர அமைச்சர்களின் இந்த திடீர் குழப்பத்தைக்கண்டு, காமராசரும் மற்ற அமைச்சர்களும் திகைத்து விட்டனராம்! கிணறு வெட்ட பூதம் புறப்பட்டது என்பார்களே அதுபோல, சித்தூர் மாவட்ட பிரச்னையைப்பற்றி பேசுவோமென்றுல் ஒசூர்தாலுகாவை எங்களுக்குத் தருகிறீர்களாஎன்று கேட்கின்றனரே என விழித்தனராம்! பரிதாபம்! டெல்லி தேவதைகளின் பிடிப்பு நமது அமைச்சர்களை என்ன பாடு படுத்துகிறது பார்த்தீர்களா!

ஆந்திர அமைச்சர்களின் இந்த புதிய குழப்பத்தைக் கண்டு கலங்கிய காமராசர் அமைச்சர் குழு, ஒருவாறு சமாளித்துக்கொண்டு, நாம் பேசவேண்டியதோ—சித்தூர் எல்லைப்பிரச்னை, அதைவிடுத்து நாங்கள் மனதில்கூடஎண்ணுதஒருபுதிய பிரச்னையை கிளப்புகிறீர்களே இது நியாயமா! என்று எவ்வளவோ வேண்டிக் கேட்டுக்கொண்டும், ஆந்திர அமைச்சர்கள் "போகாத ஊருக்குப் புரியாத பாதை" கேட்ட பேர் வழிகளைப்போல வம்பு பேசினராம்!

சரி, உங்களைப்பிடித்துள்ள இந்தப் புதுக்குழப்பம் குணமாவதற்கு ஒரு மாத தவணை தருகிறோம், அதற்குள்ளாக நீங்கள் உச்சுகுளிர்ந்து, நமது பேச்சு வார்த்தைக்கு ஏற்ற திறமை—நேர்மை ஆகியவைகளுடன் வாருங்கள் என்று சென்னை மாநில அமைச்சர்கள் மிகத்தைரியமாகக் கூறி விட்டனராம்!

இந்த நிலையில் ஆந்திர–சென்னை அமைச்சர்கள் "பேச்சுவார்த்தையின் இடுப்ப" முறிந்து-மருத்துவ விடுதிக்கு அனுப்பப்பட்டதாம்!

●

ஆந்திரா-சென்னை மந்திரிகளின் பேச்சு-வார்த்தையின் பின் நிகழ்ச்சிக்குச் சம்மந்தமில்லாத ஒசூர் குழப்பத்தைக் கிளப்பியதால், பேச்சு—வார்த்தை முறிந்து விட்டது. எவ்வளவு தந்திரம் பார்த்தீர்களா! அதாவது விவாதிக்கப்படவேண்டிய முக்கிய பிரச்னையின் காலம் மேலும் தள்ளிபோடப்பட்டது: அந்த அளவுக்கு லாபம்தானே! இது ஆந்திர அமைச்சர்களின் அபார கண்டுபிடிப்பு. இப்படி எத்தனை காலத்துக்குத்தான் சித்தூர் மாவட்ட பிரச்னையை தள்ளிப்போட்டு ஏய்த்து வரமுடியும்? இதனை ஆந்திர அமைச்சர்கள் உணராதது வருந்தத் தக்கதாகும்.

தமிழர்களிடம் காட்டும் இந்த வித்தையை, தங்களின் உரிமையைப் பறித்துக் கொழுத்துவாழும் வடநாட்டு ஆதிக்கத்திடம் காட்டினுல் அதிலே அறிவுடமையிருக்கலாம், ஆனல் ஆந்திர அமைச்சர்களோ அதற்கு நேர்மாறுன நடவடிக்கைகளில் ஈடுபட முனைவது அரசியல் யூகம் படைத்த செயலாகாது என்பதைப் புரிந்து கொள்ள வில்லையென்று நாம் கூறுவதற்கில்லை, புரிந்து கொள்ளாததைப் போல நடிக்கின்றனர்! ஆனல் இதனின் விளைவு என்ன ஆகும் என்பதை சிந்தித்துப் பார்க்க ஆந்திர அமைச்சர்களின் ஆத்திரம் வழி மறைக்கிறது போலும்!

சென்னை மாநில அமைச்சர்கள் வேண்டுமானுல் இப்பிரச்னையில் தமிழகத்துடன் ஒருதாலுகா வந்தாலென்ன—அல்லது போனுலென்ன என்ற வேதாந்தத்தை கடைசி நேரத்தில் பேசித்திரிவார்களேயானுல் கூட நாம் ஆச்சரியப்படுவதற்கில்லை. ஏனெனில் டெல்லி தேவதைகளின் உத்திரவை மீறி நடக்கும் அரசியல் தன்மானம் நமது மந்திரிகளுக்குக் கடுகளவும் இல்லாதவகையில் இந்தியக் குடிஅரசு ஆட்சி மிரட்டி வைத்திருக்கிறது!

மற்ற மாநிலங்களும் இதுபோலவே பிணைக்கப்பட்டிருந்தாலும், சமயம் நேரும்போது வட நாட்டு ஆதிக்கத்தைத் தட்டிக் கேட்பதைப்போல் பேசுகின்றனர், ஆந்திர மாநிலம் உள்ளிட்ட பிற மாநில அமைச்சர்கள்!

ஆனல் சென்னை மாநில அமைச்சர்களோ டெல்லி தேவதைகளிடம் சபாஷ் பட்டம் வாங்குவதிலே தங்களின் "திறமை"யைக் காட்டிவருகிறது.

எனவே சென்னை மாநில அரசினர் ஒருக்கால் மேற் கூறப்பட்ட வேதாந்தம் பேசினுல், அதை மக்கள் ஏற்றுக்கொள்ளத் தயாராயில்லை யென்பதை ஆந்திர அமைச்சர்கள் உணருமாறு வேண்டுகிறோம். எனவே வீண்வம்புகளைக்கிளப்பி காலத்தை வீணுக்குவதைவிட விவேகத்துடன் சித்தூர்—மாவட்ட தமிழ்ப்பகுதிப் பிரச்னையை இனிதுமுடிக்க மனவளம் பெறுமாறு ஆந்திர முதலமைச்சர்களுக்கும் ஏனைய அமைச்சர்களுக்கும் அறிவுறுத்துகிறோம்.

அதைவிடுத்து "உன் வீட்டுக்கு வந்தால்என்ன தருகிறுய்-என் வீட்டுக்கு வந்தால் என்ன கொண்டு வருகிறுய்" என்ற பாணியில் தமிழ்நாட்டு மக்களின் உரிமையில் கையை வைக்க முனைவது—வெற்றி அளிக்கக் கூடியதுமல்ல, விவேகம் படைத்த சொல்லுமல்ல என்பதை மீண்டும் ஆந்திரஅமைச்சர்களுக்கு நினைவூட்டுகிறோம்.

★

# திராவிடன்

ஆசிரியர்: என். வி. நடராசன்.

மாலை: 9 11—11—55 : வெள்ளி : : விலை 3 அணா மலர்: 13


## மந்திரி கோபாலரே

### இதென்ன புது குழப்பம்?

### போகாத ஊருக்குப் புரியாத பாதை கேட்கிறீரே!

சாதாரணமாக ஒரு ஊரிலேயோ அல்லது பொது நிறுவனங்களிலேயோ ஏற்படும் தகராறுக்குரிய பிரச்னைகளில் அதற்கு சம்பந்தப் பட்ட இரு சாராரிடையே கூடுமான அளவு புத்தி இருந்தால் அதைத்தீர்த்துக் கொள்ளும் வழிவகையும் மிக எளிதாக அமைந்துவிடும்.

ஆனால் தகராறுக்குக் காரணமானவர்களில் ஒரு சாரார் எவ்விதத்திலும் அதை ஒழுங்காக முடியவிடக் கூடாது என்று குறும்புத்தனம் காட்டினால், அப்பிரச்னை நீடித்துக் கொண்டே செல்வதில் ஆச்சரியமில்லை.

இவ்விதம் குறும்புத்தனம் காட்டுவோர், சம்பந்தப்பட்ட பிரச்னையின் மீது தங்களின் எண்ணத்தைத் தெரிவிக்க மாட்டார்கள், அதை அடியோடு மறைத்துவிட்டு, தங்களின் பாட்டனும் தங்களுக்கு மாறுபட்டவர்களின் பாட்டனும் கொண்டிருந்த தகராறைப்பற்றி வீண் கேள்விகளை எழுப்புவர்! அதாவது சம்பந்தப்பட்ட பிரச்னையை விவாதத்திற்கு எடுத்துக் கொள்ளாமல் தடுப்பதற்கும், காலத்தை வீணாக்குவதற்கும், சந்தர்ப்பப்பட்டால் தங்களுக்கு மாற்றாரின் பொறுமையை அளவுக்கு மீறி சோதித்து குழப்பமுண்டாக்குவதற்கும் செய்யப்படும் சூழ்ச்சியாகும். தங்களின் பித்தலாட்டம் மறைக்கப்படுவதற்கு இவ்வித மட்டரகமான செயலில் இறங்கும் பேர்வழிகளின் திருவிளையாடலை நாட்டுப் பிரச்னைகளிலிருந்து வீட்டுப் பிரச்னைகள் வரை காணலாம்!

●

சென்னை — ஆந்திர எல்லையிலுள்ள சித்தூர் மாவட்டத் தமிழ்ப் பகுதிகள் தமிழகத்துடன் சேர வேண்டும் என்ற பிரச்னை சென்ற இரண்டு ஆண்டுகளாக தி. மு. கழகம் உள்ளிட்ட மற்றும் சில கட்சிகள் திட்டவட்டமாகத் தெரிவித்திருப்பதையும் சில சமயங்களில் தீவிர கிளர்ச்சிகளில் ஈடுபட்டதையும் பொதுமக்கள் அறிந்ததேயாகும்.

ஆனால், அரசியல் கட்சிகள் எதுவும் இப்பிரச்னையில் கிளர்ச்சி செய்ய வேண்டியதில்லை யென்றும், ஆந்திர—சென்னை சர்க்கார்களே நேச முறையில் கலந்து பேசி தமிழகத்துக் குரித்தான பகுதிகளைத் தமிழகத்துடன் சேர்ப்பதில் நல்ல முடிவு காணுவர் என்றும் உறுதி யளித்தனர்.

கிளர்ச்சி நடத்தித்தான் ஒவ்வொரு பிரச்னையிலும் முடிவு காண வேண்டுமென்பது தி. மு. கழகத்தின் எண்ணமல்ல, கூடுமான அளவு சம்பந்தப்பட்டவர்கள் கலந்து பேசி முடிவு காண்பது எதிர் காலத்தின் நல்லுறவுக்கும் வழிகாணும் என்ற எண்ணத்தின் மீது—சென்னை—ஆந்திர அமைச்சர்களின் பேச்சு வார்த்தை வரை, சித்தூர் பிரச்னையில் யாதொரு கிளர்ச்சியையும் செய்ய வேண்டியதில்லை யென்ற வேண்டுகோளை தி. மு. கழகமும், ஏற்றுக் கொண்டது.

ஆனால், இந்த இடைக் காலத்தில் சித்தூர் தமிழ்ப் பகுதிகள் தமிழகத்துடன் சேர வேண்டுமென்பதற்கான நியாயமான விளக்கங்களை, புள்ளி விவரங்களை, வேண்டுகோளை மாநாட்டின் வாயிலாகவும் மற்றும் கழக ஏட்டின் மூலமாகவும் இரு சர்க்காருக்கும் எடுத்துக் காட்டி வந்துள்ளது தி. மு. கழகம்.

சென்னை அமைச்சர்களும் அதுபோலவே ஆந்திர அமைச்சர்களை அணுகுவதும் இப்பிரச்னை குறித்து ஜாடைமாடையாகப் பேசுவதுமான துவக்க வேலைகளில் ஈடுபட்டு, இறுதியாக சென்ற வாரம் அப்பிரச்னையில் முடிவு காணுவது என்று திட்டமிட்டு, சென்னை சர்க்கார் மாளிகையில் ஆந்

**நக்கீரன்**

திர முதலமைச்சர் கோபால ரெட்டி அவர்கள் அவரது சகா மந்திரிகளுடனும், அது போலவே காமராசர் அவர்கள் தமது துணை மந்திரிகளுடனும் கலந்து பேச ஆரம்பித்தனர்!

இந்த இரு சர்க்காரும் பேசுவதற்கு எடுத்துக் கொள்ளப்பட வேண்டிய பிரச்னை சித்தூர் மாவட்டத்திலுள்ள தமிழ்ப் பகுதிகளைப் பொறுத்ததேயன்றி வேறு பிரச்னைகளல்ல என்பது நாடறிந்த உண்மையாகும்.

ஆனால், இந்த இரு சர்க்கார் அமைச்சர்களின் மாநாட்டின் பேச்சு வார்த்தையின் துவக்கத்திலேயே வந்த விவகாரத்தை மறைத்துவிட்டு விவேகமற்ற பேச்சில் இறங்கினராம் ஆந்திர அமைச்சர்கள்

சேலம் மாவட்டத்திலுள்ள ஓசூர் தாலுக்கா, ஆந்திர மாநிலத்துடன் சேர்க்கப்பட வேண்டும்—அதற்கு என்ன பதில் கூறுகிறீர்கள், இதில் நீங்கள் எங்களுக்குத் திருப்தியான பதிலைக் கூறினால் சித்தூர் மாவட்டத்தில் ஏதோ ஓரிரு தாலுக்காக்களைத் தருவதற்கு 'நாங்கள் சம்மதிப்பதற்கு யோசிக்க முடியும். எனவே என்ன பதில் கூறுகிறீர்கள் என்று சென்னை மாநில அமைச்சர்களைக் கேட்டனராம் ஆந்திர அமைச்சர்கள்!

ஆந்திர அமைச்சர்களின் இந்த திடீர் குழப்பத்தைக்கண்டு, காமராசரும் மற்ற அமைச்சர்களும் திகைத்து விட்டனராம்! கிணறு வெட்ட பூதம் புறப்பட்டது என்பார்களே அதுபோல, சித்தூர் மாவட்ட பிரச்னையைப்பற்றி பேசுவோமென்றால் ஓசூர் தாலுகாவை எங்களுக்குத் தருகிறீர்களாஎன்று கேட்கின்றனரே என விழித்தனராம்! பரிதாபம்! டெல்லி தேவதைகளின் பிடிப்பு நமது அமைச்சர்களை என்ன பாடு படுத்துகிறது பார்த்தீர்களா!

ஆந்திர அமைச்சர்களின் இந்த புதிய குழப்பத்தைக் கண்டு கலங்கிய காமராசர் அமைச்சர் குழு, ஒருவாறு சமாளித்துக்கொண்டு, நாம் பேசவேண்டியதோ—சித்தூர் எல்லைப்பிரச்னை, அதைவிடுத்து நாங்கள் மனதில்கூட எண்ணாதஒருபுதிய பிரச்னையை கிளப்புகிறீர்களே இது நியாயமா! என்று எவ்வளவோ வேண்டிக் கேட்டுக்கொண்டும், ஆந்திர அமைச்சர்கள் "போகாத ஊருக்குப் புரியாத பாதை" கேட்ட பேர் வழிகளைப்போல வம்பு பேசினராம்!

சரி, உங்களைப்பிடித்துள்ள இந்தப் புதுக்குழப்பம் குணமாவதற்கு ஒரு மாத தவணை தருகிறோம், அதற்குள்ளாக நீங்கள் உச்சகுளிர்ந்து, நமது பேச்சு வார்த்தைக்கு ஏற்ற திறமை—நேர்மை, ஆகியவைகளுடன் வாருங்கள் என்று சென்னை மாநில அமைச்சர்கள் மிகத்தைரியமாகக் கூறி விட்டனராம்!

இந்த நிலையில் ஆந்திர—சென்னை அமைச்சர்கள் "பேச்சுவார்த்தையின் இடுப்பு" முறிந்து—மருத்துவ விடுதிக்கு அனுப்பப்பட்டதாம்!

●

ஆந்திரா-சென்னை மந்திரிகளின் பேச்சு-வார்த்தையின் பின் நிகழ்ச்சிக்குச் சம்மந்தமில்லாத ஓசூர் குழப்பத்தைக் கிளப்பியதால், பேச்சு—வார்த்தை முறிந்து விட்டது. எவ்வளவு தந்திரம் பார்த்தீர்களா! அதாவது விவாதிக்கப்படவேண்டிய முக்கிய பிரச்னையின் காலம் மேலும் தள்ளிபோடப்பட்டது. அந்த அளவுக்கு லாபம்தானே! இது ஆந்திர அமைச்சர்களின் அபார கண்டுபிடிப்பு. இப்படி எத்தனை காலத்துக்குத்தான் சித்தூர் மாவட்ட பிரச்னையை தள்ளிப்போட்டு ஏய்த்து வரமுடியும்? இதனை ஆந்திர அமைச்சர்கள் உணராதது வருந்தத்தக்கதாகும்.

தமிழர்களிடம் காட்டும் இந்த வித்தையை, தங்களின் உரிமையைப் பறித்துக் கொழுத்துவாழும் வடநாட்டு ஆதிக்கத்திடம் காட்டினால் அதிலே அறிவுடைமையிருக்கலாம், ஆனால் ஆந்திர அமைச்சர்களோ அதற்கு நேர்மாறான நடவடிக்கைகளில் ஈடுபட முனைவது அரசியல் யூகம் படைத்த செயலாகாது என்பதைப் புரிந்து கொள்ள வில்லையென்று நாம் கூறுவதற்கில்லை, புரிந்து கொள்ளாததைப் போல நடிக்கின்றனர்! ஆனால் இதனின் விளைவு என்ன ஆகும் என்பதை சிந்தித்துப் பார்க்க ஆந்திர அமைச்சர்களின் ஆத்திரம் வழி மறைக்கிறது போலும்!

சென்னை மாநில அமைச்சர்கள் வேண்டுமானால் இப்பிரச்னையில் தமிழகத்துடன் ஒருதாலுகா வந்தாலென்ன—அல்லது போனாலென்ன என்ற வேதாந்தத்தை கடைசி நேரத்தில் பேசித்திரிவார்களேயானால் கூட நாம் ஆச்சரியப்படுவதற்கில்லை. ஏனெனில் டெல்லி தேவதைகளின் உத்திரவை மீறி நடக்கும் அரசியல் தன்மானம் நமது மந்திரிகளுக்குக் கடுகளவும் இல்லாதவகையில் இந்தியக் குடிஅரசு ஆட்சி மிரட்டி வைத்திருக்கிறது!

மற்ற மாநிலங்களும் இதுபோலவே பிணைக்கப்பட்டிருந்தாலும், சமயம் நேரும்போது வட நாட்டு ஆதிக்கத்தைத் தட்டிக் கேட்பதைப்போல் பேசுகின்றனர், ஆந்திர மாநிலம் உள்ளிட்ட பிற மாநில அமைச்சர்கள்!

ஆனால் சென்னை மாநில அமைச்சர்களோ டெல்லி தேவதைகளிடம் சபாஷ் பட்டம் வாங்குவதிலே தங்களின் "திறமை"யைக் காட்டிவருகிறது.

எனவே சென்னை மாநில அரசினர் ஒருக்கால் மேற் கூறப்பட்ட வேதாந்தம் பேசினால், அதை மக்கள் ஏற்றுக்கொள்ளத் தயாராயில்லை யென்பதை ஆந்திர அமைச்சர்கள் உணருமாறு வேண்டுகிறோம். எனவே வீண்வம்புகளைக்கிளப்பி காலத்தை வீணாக்குவதைவிட விவேகத்துடன் சித்தூர்—மாவட்ட தமிழ்ப்பகுதிப் பிரச்னையை இனிதுமுடிக்க மனவளம் பெறுமாறு ஆந்திர முதலமைச்சர்களுக்கும் ஏனைய அமைச்சர்களுக்கும் அறிவுறுத்துகிறோம்.

அதைவிடுத்து "உன் வீட்டுக்கு வந்தால்என்ன தருகிறாய்—என் வீட்டுக்கு வந்தால் என்ன கொண்டு வருகிறாய்" என்ற பாணியில் தமிழ்நாட்டு மக்களின் உரிமையில் கையை வைக்க முனைவது—வெற்றி அளிக்கக் கூடியதுமல்ல, விவேகம் படைத்த சொல்லுமல்ல என்பதை மீண்டும் ஆந்திர அமைச்சர்களுக்கு நினைவூட்டுகிறோம்.

★

# நைல் நதி தீரத்திலே...!

"சுகுணன்"

அந்தி வானத்துச் சிகப்பானது, நைல் நதியின் நன்னீரை செந்நீராகக் காட்டிற்று. சந்தடியின்றி அசைந்துக் கொண்டிருந்தது நைல் நதி. நதியின் அருகே செல்லும் பாதையில், குதிரைகளின் குளம்படிகள் தரையின் மீது தாளம்போட, வீரர் பலர் புடைசூழ, சலனமற்று ஓடும் நைல் நதியின் அமைதியினைக் கண்டு ரசித்துக் கொண்டே சொககவைக்கும் செக்கர் வானத்திற்கும், கொவ்வையிதழ் அதரங்களுக்குமுள்ள நிற வேறு பாட்டை எண்ணிய வண்ணம், முத்துப் பல்லக்கில் அமர்ந்தவண்ணம் அவ் வீதி வழியே பவனி வந்து கொண்டிருந்தாள் அந்த அழகுத் தெய்வம்-வண்ண ஓவியம்-அவள் தான் கிளியோ பாட்ரா!

நைல் நதியை ஒருபுறம் காண்கிறாள், மறு பக்கம் அந்தக் கோமள வல்லியின் கொவ்வை யிதழினை ருசிக்கச் சீமான்களின் புகலிடமான அந்த 'பிரமிட்டு'களைக் காண்கின்றாள், ஒரு ஏளனச் சிரிப்பு, அந்த உதடுகளின் ஒளியிலே!

சிரித்துச் சிந்தையைக் கலக்கும் அந்தச் சிங்காரி அரண்மனையினை அடைந்து விட்டாள். கிளியோ-பாட்ராவின் உண்மை ஊழியன் சார்மியான், அருகே வர, அவள் தன் ஆசனத்தில் அமர்ந்தாள். உயர்ந்த ஆசனம், விலை உயர்ந்த பட்டினால் அலங்காரம் செய்யப் பட்டிருந்தது. தந்தத்தினால் இழைத்தக் கால்கள். சித்திர வேலைப்பாடுகள் அமைந்த கைப்பிடி, அரண்மனையின்கோலாகலங்கள் யாவையும் பளிங்குத்தரை பளிச்சிட்டுக் காட்டியது. அவள் விரல் அசைவிற்காகக் காத்துக் கிடக்கும் ஆயிரக் கணக்கான பணியாளர்கள். இவர்கள் யாவரும், அந்த அழகு ராணிக்கு உயர்வளிக்கின்றனரோ, அல்லது உயர்ந்து கிடக்கும் விலை மதிப்பற்ற அந்த ஆசனத்திற்கு மதிப்பளிக்கின்றனரோ, யாரே அறிவர்!

நடு நடுவே இருக்கும் அந்தத் தூண்களில்வரையப்பட்டிருக்கும் சிற்பம் எந்த தேசத்துச் சிற்பியின் கைத்திறனோ என வியப்பை அளிக்கும் வண்ணம் அமைந்திருந்தது.

அந்தக் கோமகனுக்குக் கீழே பலவீரர்கள் மதிப்பளித்து நின்று கொண்டிருந்தனர். சார்மியான் மட்டும் அருகே அமர்ந்திருந்தான்.

மயில் தோகையினால், அழகுத் தாதியர்கள் விசிற, அந்த எழில் ராணியின் மிருதுவான கழுத்திலே தமிழ் நாட்டு முத்துக்கள் ஒளிவீச, விலையுயர்ந்த பட்டாடைகள் அந்தத் தங்க நிகர் மேனியின் பாதியை மறைக்க, ஆரஞ்சுப் பழத்தின் சிறு சுளை போன்ற அந்த உதடுகள் புன் முறுவல் பூக்க, விற்புருவங்கள் காதல் அம்பை எய்த, குறுகுறுத்த அந்தக் கண்கள் அவள் அழகிற்குப் பட்டயம் கட்ட, கொழுத்த மாட்டின் கூர்மையான கொம்புகளின் முனையிலே தங்கப் பூண் மாட்டியதைப் போன்று, அந்த மெல்லிய விரல்கள் அழகு நயணம் புரிய, தனக்கே உரிய அந்த அலட்சிய பாவத்துடன் வீற்றிருந்தாள் அந்தச் சீமாட்டி.

*

மியாமெளன்—அழகு வாலிபன். இளங்காளை. திரண்ட தோள்கள்—எஃகு போன்று வலிமை வாய்ந்த திடமான உடல்—ஆரஞ்சு நிற உடலிலே போர் உடைகள்—சுருட்டை மயிர்—யாவரையும் வசிகரிக்கும் அழகான முகம்—இவைதான் மியாமெளன். அவன் பார்வைக்காக ஏங்கிக் கிடந்த எழில் நங்கைகள் ஏராளம்-ஏராளம்.

ஏங்கிக் கிடந்தவர்களை ஏறிட்டுப் பார்க்கவில்லை, அந்த இளைஞன். மனித இயல்பே அப்படித் தானே? கிட்டாது எனத் தோன்றும் பொருளின் மீது கொள்ளை ஆசை ஏற்படும். அது போலத் தான், மியாமெளனின் இதய அரங்கிலே, ஒரே ஒருத்தித்தான் சதிராடிக் கொண்டிருந்தாள், ஒரே ஒரு உருவம் தான் அவன் உள்ள ஊஞ்சலிலே ஊசலாடிக் கொண்டிருந்தது. அவன் மனதினையே கலக்கினாள் ஓர் கட்டழகி. துடிக்கும் அவளின் உதடுகளின் இன்ப முத்திரைக்கு வாழ்வையே அர்ப்பணிக்க உறுதி கொண்டான். செத்தாலும் பரவாயில்லை; சத்தான ஒரு முத்தத்திற்காக என்று எண்ணினான். ஒரு நாள் இன்பத்திற்குத் தன் உயிரையே காணிக்கையாகக் கொடுக்கக் காத்துக் கிடந்தான் அந்த இளமை ததும்பும் வாலிபன், மியாமெளனின் ஆசைகளையும், உணர்ச்சிகளையும் உருவாக்க முடிந்து, உருவம் ஒன்று கொடுத்தால், அது நிச்சயமாகக் கிளியோ பாட்ராவின் உருவமாகத் தான் இருக்கும். அவன் வாழ்வின் இலட்சியமே கிளியோ பாட்ரா தான்!

கிளியோ பாட்ரா செல்லுமிடங்களை யெல்லாம் நிழல் போலத் தொடர்ந்தான். ஒரு நாள் அந்த அழகுக் காரிகை, விழா ஒன்றுக்கு சென்று விட்டு திரும்பிக் கொண்டிருந்தாள், கானகத்தின் நடுவே பல்லக்கு ஒன்றில். அம்பொன்று அவள் அருகே பாய்ந்து வந்தது. பல்லக்கை நிறுத்து விட்டு, அம்பு வந்த திசையே, தேடிப் பார்த்தனர் ஆட்கள். அந்தப் பெரிய கானகத்தில் அவன் எப்போதோமறைந்து விட்டான். அம்பை எடுத்தாள் அந்த அழகு நங்கை. அம்பின் நடுவே உள்ள ஓலை ஒன்றில், "நான் உன்னை காதலிக்கிறேன்" என்று எழுதியிருந்தது. அதே வார்த்தைகளை அவள் உதடுகளும் ஒரு முறை முணுமுணுத்தன. காதல் என்றால் அவளுக்குக் கல்லறை என்று பொருள். அவள் வாழ்க்கை அகராதியில் வார்த்தைகளின் பொருளே வேறுதான்!

•

ஒரு நாள்......! எழில் மிக்க பொழிலின் நடுவே, கிளியோபாட்ராவின் குளிக்கும் தடாகம்ஒன்று:

இனிய தென்றல் காற்று மெல்ல வீசிக் கொண்டிருந்தது. கிளியோ பாட்ரா குளித்துக் கொண்டு தண்ணீரோடு விளையாடிக்கொண்டிருந்தாள். சோலையின் நடுவே சல சலப்புச் சத்தம் ஏற்பட்டது. சத்தம் வந்த திசையை நோக்கினாள், ஏதோ ஓர் உருவம் அசைந்து வருவது போல் தோன்றிற்று. ஆடை ஒன்றை எடுத்துப் போர்த்துக் கொண்டாள்—அணிந்து கொள்ளவில்லை. அவளின் முன்னே ஒரு அழகிய வாலிபன் நின்று கொண்டிருந்தான் அவன் தான் மியாமெளன். அவன் சதைகளின் மீது ஓர் ஆட்டம் இருந்தது. அது பயத்தினால் அல்ல—அவளின் மீதிருந்த ஆசையினால். "நான் உன்னைக் காதலிக்கின்றேன்"—மெள்ளக் கூறினான்.

அன்றொரு நாள் அம்பை எய்து விட்டு ஓடி விட்டது நீ தானே? இது அவள் தொடுத்த முதற்கணை

இளைஞன் முகத்திலே சலனமற்ற மௌனம்.

நான் செல்லும் இடங்களை யெல்லாம் நிழலைப்போலத் தொடர்பவன் நீ தானே? அடுத்த கணை,

அதற்கும் பதிலில்லை.

சரி, பிழைத்துப்போ! உனக்கு உன் உயிரை அளிக்கின்றேன், எனக் கூறி விட்டு அவன் முகத்தையே உற்று நோக்கினாள்,

உயிரை வைத்துக் கொண்டு நான் என்ன செய்ய? என்று பதிலளித்தான்.

வேறென்ன தேவை? உன் உயிரினும் மேலாக நீ எதை மதிக்கிறாய்?

"உன் காதலை"—கூசாமல் கூறிவிட்டான். எத்தனையோ நாட்களாக எண்ணத்தில் தேக்கி வைத்திருந்ததைக் கூறிவிட்டான்

"சரி. என் காதலின் விளைவை நீ அறியாயோ" என்றாள் அந்த வண்ண மலர்,

அறிவேன் நன்றாக—துணிந்து விட்ட அவன் தைரியமாகவே கூறினான்.

சரி. உன் கனவுகளை நினைவுகளாக்குகின்றேன், உன்வளர்ந்து வரும் எண்ணங்களுக்கு முடிவு செய்து விடுகின்றேன். உன் பல நாள் விருப்பத்தைப்பூர்த்திசெய்து விடுகின்றேன். இன்று போகும் உன் உயிரை, நாளை வரை உனக்கு உடமையாக்குகின்றேன். என்னுடன் வா என்று கூறி அவள் முன்னே சென்றாள்—மியாமெளன் அவளைத் தொடர்ந்தான்.

இருவரும் அரண்மனைக்கு சென்றனர். உடம்பையே முத்துக்களால் அலங்காரம் செய்து கொண்டு, அழகிற்கு அழகு செய்த வண்ணம் இருந்தாள் அன்று. உணவு விடுதிக்குச் சென்றாள். அழகிய வேலைப்பாடுகள் அமைந்த பீங்கான் தட்டுகளிலே மயில் கறியும், கோப்பைகளிலே போதை தரும் பழரசங்களும் நிரம்பிக் கடந்தன. மியாமெளன் விரும்புபவை அவை யல்லவே! போதை தரும் விழிகளைப் பருகஎண்ணினான். இனிமைதரும் கன்னங்களுடனும், ரோஜா இதழ் உதடுகளுடனும் உறவாட எண்ணினான்!

பள்ளியறை சென்றனர் மியாமௌனும், கிளியோ பாட்ராவும். வெறி யூட்டும் படங்கள் அறையெங்கும் நிரம்பிக் கிடந்தன. தங்கக் கட்டிலிலே பட்டு மெத்தை விரித்துக் கிடந்தது. பசுந்தளிர்களின் நடுவே ஆடி அசையும் ரோஜா மலரைப்போல, பச்சை நிறப் படுக்கையிலே, அந்த தங்க நிற மேனியாள் அமர்ந்திருந்தாள். அவர்களுடைய கண்கள் புரியாததொரு மொழியைப் பேசிக் கொண்டிருந்தன.

மியாமெளன், வாழ்வின்பயனை அடைந்து விட்டான். அவனுக்கு இனி எந்த இலட்சியமும் கிடையாது. இரவு, கழிந்து கொண்டே வந்தது. பொழுது விடிந்ததும், அவன் வாழ்வும் விடிந்து விடப் போகிறதென அவனுக்கேத் தெரியும்—கலங்கவில்லை அவன். இலட்சியம் நிறைவேறி விட்டது. இரவும் அகன்று விட்டது, இன்னும் சிறிது நேரத்தில் அவன் உயிர் அவன் உடலை விட்டுப் பிரியப் போகின்றது.

யாருக்கும் கலங்காத, எல்லோரையும் கலக்கிய அந்தக் காரிகையின் முகத்திலேயும் முதன்முறையாக பரிவும் பச்சாதாபமும் காணப்பட்டது. பொற்கரங்களை அவன் தோள்களின் மீது நீட்டியவாறு, "என் காதலுக்காக இன்னும் நீ வாழ்" என்று கூற அவள் உதடுகள் தயாராக இருந்தன. அந்த வார்த்தைகள் வெளிவருதற்குமுன், வெற்றி முழக்கம், போர்ஆரவாரம் அரண்மனையினை அடைந்தது. அந்தக் காதல் பார்வை, தோன்றியதைப் போலவே அவளை விட்டுப் பிரிந்தும் விட்டது, மார்க் அந்தோனி, போரினின்றும் திரும்பிக் கொண்டிருந்த ஆரவாரம் விளைவித்த விளைவின் பலனால் நஞ்சு கலந்த மதுக் கோப்பை மியாமெளனின் முன்னால் நீட்டப்பட்டது, கிண்ணத்தை ஒரு முறை பார்த்தான். கிளியோ பாட்ராவின் பாவமற்ற முகத்தை ஒரு முறை பார்த்தான்.

மீண்டும் ஒருமுத்தம். கிளியோ பாட்ரா தனனை விடுவித்துக் கொண்டாள். நஞ்சு கலந்த மதுவை அருந்தினான் மியாமெளன். மறு கணம் பிணமாகச் சாய்ந்தான்.

போர்க்களத்திலே பிணமலையை ஏற்படுத்தி விட்டு வந்தான் அந்தோணி, ஆசைக்கரங்களை நீட்டி வரவேற்றாள், கிளியோ பாட்ரா.

என்ன இது என்று காலால் தள்ளிய வண்ணம், மியாமெளனின் பிணத்தைக் காட்டிக் கேட்டான் அந்தோணி.

எதியோப்பிய நாட்டு அடிமை அவன். நஞ்சு வேலை செய்கிறதா என சோதித்துப் பார்த்தேன் என்றாள் அவள்.

சிரிப்பொலி—அதைத் தொடர்ந்தாற்போல மாறி மாறி எழுந்த 'இச்'சொலியாவும் கிளியோ பாட்ராவின் பளிங்குக் கல்லால் ஆன பள்ளியறையிலே தான்! இது தான் கிளியோ பாட்ராவின் வாழ்வின் ஒரு உதாரணம்!

●



பஞ்சாப் கட்டுரை

# நான் கண்ட சந்த்ராம்: சாதி ஒழிப்புப் பணி!

பஞ்சாப் பெரியார் சந்த்ராம் சாதியை ஒழிப்பதற்காக எத்தகைய பணிகள் ஆற்றினர் என்பதை இப்போது அறிவோம்.

அவரது முயற்சியால் தோற்றுவிக்கப்பட்ட 'கிருஷி ஆசிரம'த்தையும், 'ஜாட்—பாட்——தோடக் மண்டலை'யும் விரிவாக ஆராய்ப்புகுதலே அவரது சாதி ஒழிப்புப்பணியை அறிவதாகும்.

## கிருஷி ஆசிரமம்!

கிருஷி என்றால் விவசாயம்—உழவு தொழில் என்பதாகும். உழவுத் தொழிலில் ஈடுபட்டுள்ளாரை ஒன்று கூட்டி, உழவுத் தொழிலை ஓம்பியவாறே, அவர்களிடை காணப்பட்ட சாதிபேதங்களையும், இந்து—முஸ்லிம் பிணக்கையும், தீண்டுவோர்——தீண்டப்படாதார் பகையையுங்களைந்து, அன்பால் பிணைக்கப்பட்டு, சகோதர நேயத்தோடு அவர்கள் வாழ வழி கோலினர்—சந்த்ராம்.

1917-18ல், லாகூர் வட்டத்தைச் சார்ந்த பட்டி என்ற கிராமத்தில் "கிருஷி ஆசிரம"த்தை அமைத்தார்.

அந்தக் காலம் மகா மகா ஐதிகக்காலம்! எதற்கெடுத்தாலும் ஆச்சாரம், மதக்கோட்பாடு, இது, அது, என்று வெறிகொண்டு அலைந்த காலம்!

நிலத்தைப் பண்படுத்த ஆடு மாடுகளின் என்புத் துகள்களாலான ஒருவகை எருவை சந்த்ராம் உபயோகிக்க முற்பட்டதுதான் தாமதம்!

ஆ! போச்சுது! மாடு—காமதேனு! கடவுள்! அதன் எலும்பையா நிலத்திலிடுவது! அதனால் செழிக்கும் கோதுமை மணிகளையா புசிப்பது? பாபம்! பாபம்! என்று ஐதிக சாதி இந்துக்களென்போர் கூக்குரலிட்டார்கள்! வெறியாட்டு ஆடினர்கள்,

சந்த்ராம் அவர்களின், என்பு எருவு இட்டுப் பயிரிடும் போக்கை, வன்மையுடன் கண்டிக்க, ஆரிய சமாஜத்தால் நடத்தப்பட்ட "ஆரிய சஞ்சிகை" என்னும் பத்திரிகையில் பெருத்த கண்டனக் குரல்கள் எழுத்து வடிவில் எழும்பின!

அதைத் தொடர்ந்து ஜாதி அடிப்படையில் கிளம்பிய பல பத்திரிகைகளும் ஒத்து ஊதின.

சந்த்ராமை நீதி மன்றத்துக் குற்றக் கூண்டிலேற்றி தண்டிக்கப் போவதாகவும் பயமுறுத்தினர்.

எல்லாவகைக் குற்றச்சாட்டுகளுக்கும் சந்த்ராம் எழுதியனுப்பிய ஆணித்தரமான மறுப்புரைகளும், சமாதான வாதங்களும், பத்திரிகைகளால் கட்டுப்பாடான முறையில் இருட்டடிப்பு செய்யப்பட்டு விட்டன!

அதற்கிடையில் சாதி இந்துக்களின் மீதூற்றக் காழ்ப்பைக் காட்டிக்கொள்ள அந் நிகழ்ச்சியை ஓர் அரிய வாய்ப்பாகக்கொண்டு, சந்த்ராமைப் புகழ்ந்தும், சாதி இந்துக்களைத் திட்டியும் முஸ்லிம் பத்திரிகைகள் திருப்தி கொண்டன.

அவ்வாறான நிகழ்ச்சிகளெல்லாம் காட்டுத் தீயென திக்கெட்டும் பரவியது.

பஞ்சாபின் பிரபல வியாபாரிகளெல்லாம் சந்த்ராமின் குடும்பத்தாரைப் பேட்டிகண்டு, "எலும்பை எருவாக உபயோகிப்பதை, சந்த்ராம், நிறுத்தா விட்டால், அதை நீங்களும் தடுக்கா விட்டால்—உங்கள் குடும்பத்தை சாதிவிலக்குச் செய்திடுவோம்"——என்று கடிந்துரைத்தார்கள்.

அதைக்கேட்டுக் கலக்க முற்ற சந்த்ராமினது தமையனார், தம்பியைத் திருத்தப் பலவகையாலும் முயன்றார்,

ஆனால் சந்த்ராமோ, "அவர்கள் சாதிப் பிரஷ்டம் செய்வதற்கு முன்னால் நீங்களே என்னை சாதியை விட்டு விலக்கி விடுங்கள்,"—என்று அழுத்தந்திருத்தமாகக் கூறிவிட்டார்.

"எலும்பைத் தொடுவது பாபமாம்! பாபம்! எலும்பின் சத்தாலான கந்தகம் (Phosphorus) என்ற ரசாயனப் பொருளைக்கொண்டு தயாரிக்கப்பட்டத் தீக்குச்சுகளை மட்டும் அடுப்பங்கரை வரையில் விட்டுக்கொள்வது பாபமல்லவா!"—என்று இடித்துரைத்தார் சந்த்ராம்!

இந்து—முஸ்லிம் ஒற்றுமையில் அதிவிழுப்பமுடையவரல்லவா சந்த்ராம்! அதை நடைமுறையில் ஒழுக, கிருஷி ஆசிரமத்தில், சமையல் வேலைக்கென்று, ஒரு முஸ்லிம் தோழியரை வேலைக்கு அமர்த்தி யிருந்தார்.

ஒரு முஸ்லிம் மாது சமைப்பதா! அதை நாம் சாப்பிடுவதா! முடியாது!—என்று சீறினர்கள் (இந்து) சீக்கிய விவசாயிகள்!

சந்த்ராம், என்ன கொள்கை விளக்கம் பகன்றும், சமாதான உரை பகன்றும், சீக்கியர்களது சீற்றம் முற்றியே நின்றது.

விளைவு! சந்த்ராமும், அவரது குடும்பத்தவர்களும் கூண்டோடு சமூக பகிஷ்காரம் செய்யப்பட்டே விட்டார்கள்!

சாதியை ஆணிவேரோடு கல்லியெறியும் பணியில் ஈடுபட்டுள்ள சந்த்ராம் அவர்களுக்கு அச் சமூக பகிஷ்காரம் எம்மாத்திரம்! துச்சமாகக் கருதினர்! தொடர்ந்து பணியாற்ற முயன்றார்!

தோழர் காந்தியார் ஹரிஜனங்களைக் கரை ஏற்றி விடும் பணியில் இறங்குவதற்கு முன்பே சந்த்ராம் நடை முறையில் தாழ்த்தப்பட்ட மக்களுக்குப் பொருள் உதவி செய்வதிலும், சமூக நலன்களில் கவலை காட்டு வதிலும் பெருத்த ஆர்வங் காட்டினர்.

செருப்புத்தைத்துப் பிழைக்கும் ஒரு "சக்கிலி"ச் சிறுவனை எடுத்து வளர்த்து கல்வியூட்டுவதில் ஊக்கங் காட்டினர். தன் வீட்டு அடுப்பங்கரை வரைக்

## 'திருவேடம்'

கும் அவனை இட்டுச்சென்று தன் பக்கத்திலேயே அமர்த்தி உணவு உண்பார், தன் வீட்டுக் கிணற்றிலும் தண்ணீர் எடுத்து உபயோகிக்க அனுமதித்தார்,

இத்தகு நிகழ்ச்சிகள், இக்காலத்தில் அவ்வளவு அதிசயமாகத் தோன்றுவதில்லை. ஆனால் இன்னும் தீண்டாமைக் கொடுமைகள் அறவே ஒழிந்தபாடில்லை. அக் கொடுமைகளை ஒழிக்க அண்மையில் சட்டம் ஒன்று வந்ததும் இங்கே உன்னற்பாலது. எம் முறையிலாவது, தீண்டாமை அனுஷ்டித்தால் இந்திய அரசியல் சட்டம் 17-வது பிரிவின்படி தண்டனை! ஆம் ஜெயில் தண்டனை!

ஆனால் அக் காலத்தில் தீண்டாமை ஒழிப்புப் போர் ஒரு பெரிய புரட்சியேதான்.

சந்த்ராம், "சக்கிலி"ச் சிறுவனை ஆதரித்ததால் எழுந்த எதிர்ப்பு எவ்வடிவினது! சற்று நோக்குவோம்.

சந்த்ராமினது அச் செய்கையைக்கண்டு, கேட்டு, கிராமமே கொதித் தெழுந்தது.

கொதித் தெழுந்து என்ன செயய! சமூக பகிஷ்காரம்! பூ! அவ்வளவுதானே!—என அலட்சிய மொழி பகன்று, சந்த்ராம், தீண்டாமை ஒழிப்புக் கொள்கையில் உறுதியுடன் நின்று, தம் பணியைத் தொடர்ந்து நடத்தினர்!

சாதி இந்துக்கள் மட்டுந்தானா கொதிப்புற்றனர்? வெறுத்தனர்? எதிர்த்தனர்;

பஞ்சமன், தண்ணீரைத் தொடுவதா?—என்று கச்சைகட்டி எழுந்தார்கள் முஸ்லிம் தோழர்களும்!

அதிலிருந்து முஸ்லிம் தோழர்களும், சந்த்ராமின் கிருஷி ஆசிரமத்தில் சாப்பிடுவதை நிறுத்திக் கொண்டனர். அதற்கும் அசைந்தாரில்லை சந்த்ராம் சாதி ஒழிப்பு, தீண்டாமை ஒழிப்பு, இந்து-முஸ்லிம் ஒற்றுமை ஆகிய சிறந்த கொள்கைகளுக்காக ஓயாது உழைத்து வரலானர்.

ஆனால் எக்காரியத்திற்கும் பணம் அவசியமல்லவா! கிருஷி ஆசிரமத்தைத் தொடர்ந்து நடத்தப் பணமின்மைத் தட்டியது. எப்பாடு பட்டும் போதிய நிதி திரட்ட முடியாமற்போகவே கிருஷி ஆசிரமத்தை மூடி விட்டார்.

என் செய்வது! மீண்டும் பத்திரிகை ஆசிரியர் தொழிலில் இறங்கி எழுத்தினூடே சாதி ஒழிப்புப் பணி புரியலானர், அப் பத்திரிகை, முன்னமே கூறியபடி "கன்யா மகா வித்யாலயா"வின் கருவியாக விளங்கிய "பாரதி" என்ற மாதப் பத்திரிகையாகும்

அதற்கடுத்துதான் 1922-ஆம் ஆண்டில் ஜாட்——பாட்—தோடக் மண்டல் என்ற சாதி ஒழிப்பு இயக்கத்தைக் கண்டெடுத்தார். அதைப்பற்றி விரிவாக அடுத்த கட்டுரையில் கூற ஒதுக்கிக்கொள்கிறேன்.

அதற்கிடையில், இங்கே திரு. சந்த்ராம் அவர்களிடமிருந்து அண்மையில் கிடைக்கப்பெற்ற ஒரு கடிதத்தைப் பற்றிக் குறிப்பிட ஆசை உறுகிறேன்.

கடந்த மாதம், பஞ்சாப், என்றுங் காணாத வெள்ளப் பெருக்கினால் அலைக்கழிக்கப்பட்டதை, பத்திரிகைகளின் வாயிலாகவும், வெள்ளித்திரை நிழற்படக் காட்சி வாயிலாகவும் கண்டு திடுக்குற்றோமல்லவா?

அவ் வெள்ளப் பெருக்கின் பைசாசப்போக்கினால், ரவி யாற்றுக்கும் பியாஸ் யாற்றுக்கும் இடையேயுள்ள அமிருத சரஸ் நகரமும், பியாஸ் யாற்றுக்கும், சட்லட்ஜ் யாற்றுக்கும் இடையேயுள்ள ஜலந்தர் நகரமும், பெரிதும் பாதிக்கப்பட்ட போது ஜலந்தரை அடுத்துள்ள ஹோஷியார்பூரும், திரு. சந்த்ராம் அவர்கள் வசித்திருக்க புரானி பாஸி கிராமமும், பாதிக்கப்படவில்லையா!—என்றும், அங்கே அவரதும், அவரைச் சார்ந்தவர்களதுமான தற்போதய நிலை யென்ன!—வினவி கடிதம் ஒன்று சந்த்ராமிற்கு விடுத்திருந்தேன்,

அக் கடிதத்தில். வழக்கம்போல திராவிடனில் வெளிவந்து கொண்டிருக்கும் இக் கட்டுரை வரிசையைப் பற்றியும் குறிப்பிட்டிருந்தேன்.

அதற்குப் பதிலாகத்தான் கீழ்கண்ட கனிவும், அருமையும் தோய்ந்த கடிதத்தை எழுதியிருக்கிறார் திரு. சந்த்ராம் அவர்கள்:—

Purani Basi. Hoshiarpur,
31 st oct., 55.

My dear T..............

Thank you for your concern and enquiry about us. By God's grace our village has comparatively suffered very little by rains. Many old houses have fallen but, there was no loss of life, because the site of the village is considerably high.

I am very fortunate to haue you as my friend. who is writing my life in Tamil. I wish. I could read your Tamil articles and enjoy what you hav written about me and the anti-caste-mission.

I have written a small pamphlet on caste In Hindi and have send it to Shri. Jagjivan Ram. Union Minister for approval It will be puplished in very large number by the Government. if it is approved by him. And will be distributed free of charge.

Affectionately yours,
(Sd) Sant Ram.

அதாவது:

புரானிபாஸீ,
ஹோஷியார் பூர்,
அக்டோபர் 31, 1955.

எனதருமை தி.........

எங்களைப் பற்றிய தங்களது கவலைக்கும், தற்போதய நிலை அறிய விழைதலுக்கும் நன்றி இறையருளால் எங்களது கிராமம், மற்ற பகுதிகளைக் காட்டிலும், குறைந்த அளவே பாதிக்கப்பட்டுள்ளது. அநேக வீடுகளெல்லாம் இடிந்து விழுந்தன. ஆனால் உயிர்ச்சேதம் ஏது மில்லை. எங்களது கிராமப் பகுதியின் தரை மட்டம், சற்று உயர்ந்திருத்தலே, வெள்ளக் கொடுமையினின்று தப்பித்ததற்குக் காரணம்.

நான் கொடுத்து வைத்தவன், தங்களை எனது நண்பராகப் பெறும் பேற்றையுற்றேன்! தாங்கள் எனது வாழ்கையைப்பற்றி எழுதிக்கொண்டு வருகிறீர்கள். நான தங்களது தமிழ்க் கட்டுரைகளைப் படிக்கவேண்டும்! அவைகளில் என்னைப்பற்றியும், எனது சாதி ஒழிப்புப் பணியைப் பற்றியும் என்ன எழுதுகிறீர்கள் என அறிந்து மகிழ வேண்டும். இது எனது அவா! (ஆனால் அவர் தமிழ் அறியாரே!)

சாதியைப்பற்றி, ஒரு சுருக்கமான, அறிக்கைப் பத்திரம் (Pamphlet) ஒன்று இந்தியில் தயாரித்தேன். அதை மத்திய மந்திரி திரு. ஜகஜீவன் ராம் அவர்களது அங்கீகாரத்திற்கு அனுப்பியுள்ளேன். அது, அவரது அங்கீகாரத்தைப் பெற்றுவிட்டால், அரசாங்கத்தாராலேயே, பெருத்த அளவில் பிரசுரிக்கப்பட்டு, இனமாகவே யாவருக்கும் வழங்கப்படும்.

தங்கள் பிரியமுள்ள,
(ஒ-ம்) சந்த்ராம்.

ஆக, அவர் இன்றும், சாதி ஒழிப்புப் பணியில் எவ்வளவு உன்னிப்பாகவும், தீவிரமாகவும், இருக்கிறார் என்பதை அறிகிறோமல்லவா!

அவர் உயிருள்ளமட்டும் சாதியை மாய்க்க,ஓயாது உழைத்தே தீருவார் என்பதற்கு வேறென்ன அத்தாட்சி வேண்டும், பாருங்கள்!

(அடுத்து ஜாட்-பாட்-தோடக் மண்டலைப்பற்றி).

●

# திராவிடப் பூங்கா

→ வந்தைவேள் ←

## தீபாவளியும் — ஜனாதிபதியும்!

தீபாவளியுள் தீபாவளி இவ்
[வாண்டுத் தீபாவளி
அத்தீபாவளி, தீபாவளியு
[ளெல்லாம் தலை!

இன்னுஞ் சின் நாட்களில் வரப்போகிற தீபாவளி, நம் தமிழகத்தில் சாதாரண தீபாவளியாகவா இருக்கமுடியும்? இல்லை! விசேஷத் தீபாவளியாகத் தான் இருக்கும்! ஏனெனின், இந்திய ஜனாதிபதி, டாக்டர். இராஜேந்திரபிரசாத் அவர்கள், நம் தமிகழத்திற்குப் போந்து, தீபாவளி கொண்டாடப் போகிறார், என்றால் விசேஷமல்லவா?

தீபாவளி என்பது இந்துக்கள் என்போர்களின் பண்டிகை அதை மதச் சார் பற்ற சர்க்காரின் ஏகப்பிரதிநிதியான, ஜனபதி, தனிமையில் வீட்டோடு இல்லாமல், பொதுமையில் தமிழ் மக்களுடன் கலந்து கொண்டாடலாமா? என்று கேட்டு விடாதீர்கள். அதெல்லாம்குறுகிய புத்தி என்று ஒரேயடியாய் அடித்து விடுவார்கள்.

எப்படியாவது கொண்டாடி விட்டுப் போகட்டும். ஆனால் அறிவிற்குப் பொருத்தமான பண்டிகைதானா என்பதைத் தமிழ் மக்கள் மட்டுமாவது உணர்ந்து பார்த்தால் போதுமானது.

பூமி என்கிற "பூமாதேவிக்கும் பன்றி என்கிறவிஷ்ணு அவதாரத்திற்கும் பிறந்த குழந்தை" தான் நரகாசூரனும்!

கடவுளச்சிக்கும், கடவுளனுக்கும் பிறந்த பிள்ளை, எப்படித் தான் "அசுர" குலத்தில் சேர்க்கப்பட்டதோ? இது அறிவிற்குப் பொருத்த முடையதோ? போகட்டும்!

பெற்ற பிள்ளையைக்கொல்லும் மாபாதகம்எங்கேயாவதுஅதுவும் கடவுள்களிடம், நிகழுமோ?

கிருஷ்ணனும், சத்தியபாமாவும் சேர்ந்து, சொந்த மைந்தனெனக் கருதப்படுகிற, நரகாசூரனை அம்புகள் கொண்டு துளைத்துசாகடித்தார்கள்! இது எங்கேயாவது அடுக்குமா?

பெற்ற மைந்தனையே, கொலை புரியும், மாபாதகச் செயலை கடவுள்களே நிறைவேற்றி வைத்ததாகக் கருதும் புராணங்களை ஏற்கத்தான் வேண்டுமோ?

திராவிடனைத் திட்டிக் காட்டப் பட்ட நரகாசூரன் மாண்டதற்காக, திராவிடர்களாகிய இத் தமிழக மக்கள் துக்கம் புரிதலையொழித்து, களியாட்டமும், வேட்டு, வெடியாட்டமும் ஆடித் திரியலாமா?

திராவிடர்களது பணம் வெடி மருந்தால் கரியாகத்தான் வேண்டுமா? திராவிடர்களது தன் மானம் காற்றில் பறக்கத்தான் வேண்டுமா? சிந்தியுங்கள்!

திரு. பிரசாத் அவர்கள் ஆரியர்! அவர் கொண்டாடட்டும்! நாம் கொண்டாடலாமா?

●

## மீண்டும் "சாது"க்களைப் பற்றி நேரு!

அண்மையில் பிரதமர் நேரு அவர்கள், டில்லியில் தமது பேச்சொன்றில் "சாது"க்களைப் பற்றிக் குறிப்பிட்டிருந்தார்.

அவர் என்ன கூறினார்? "நம் நாட்டில் ஏறத் தாழ எண்பது இலட்சம் "சாது"க்கள் இருக்கிறார்கள், அவர்கள் அத்தனை பேரும், உண்மை சாதுக்கள் அல்லர். அவர்களில் பெரும் பாலோர் போலி வேடதாரிகள். அத்தகையோரால் நாட்டிற்குத் தீங்கேயொழிய எட்டுணையளவும் நன்மை யில்லை. காவியுடை பூண்டவர்களெல்லாம் "சாமியார்" ஆகிவிட மாட்டார்கள். பொதுவாக "மழித்தலும் நீட்டலும் வேண்டா; உலகம் பழித்தது ஒழித்து விடின்"—என்ற குறளோவியத்திற் கொப்ப, ஹரித்துவாரத்துச் "சாமியார்"களைப் பார்த்துத் திரும்பிய பிறகு கூறி யிருக்கிறார் நேரு.

அதே "சாது"க்களைப் பற்றி மீண்டும் நேரு அவர்கள் குறிப்பிட்டுப் பேசியிருக்கிறார்.

இம்மாதம் இரண்டாம் நாள், ராஜ்கோட் நகரில் "சௌராஷ்டிர பாரத் சேவா சமாஜ"த்தைத் துவக்கி வைத்த நேரு: இவ்விந்திய நாட்டில் ஐம்பத்தைந்து இலட்ச "சாது"க்கள் இருக்கிறார்கள், (முன்பு எண்பது இலட்சம் என்று கூறினார். இப்போது ஐம்பத்தைந்து இலட்சத்திற்கு இறங்கிவிட்டார். அது கிடக்க) அவர்களில் உண்மை வழி ஒழுகும் அசல் சந்நியாசிகள் ஏதோ பத்து —பதினையாயிரம் பேர்களாவது இருப்பார்கள். இப் புள்ளி விவரம் பத்து-பதினையாயிரம் என்று குத்து மதிப்பாய் கூறுதலே உண்மைக்கணக்கு இல்லை என்பதாகப் படுகிறது. அதோடு முன்பொரு முறை மொத்த சாதுக்கள் 80 இலட்சம் என்று கூறி, இப்போது 55 இலட்சம் என்று கூறுவதாலும் சரியான புள்ளிவிவரம் இல்லை என்பதாகவும் படுகிறது. அதுவும் எப்படியோ போகட்டும்

இம் முறை "சாது"க்களைப் பற்றிக் கூறிய தென்னை?

சாதுக்களென்போர் சமூக முன்னேற்றத்தைத் தடைசெய்து பாழ்படுத்துபவர்களாகவே காட்சியளிக்கிறார்கள், அவர்கள், நாட்டு மக்களை வஞ்சித்து வயிறு வளப்பவர்களாக மாறிவிட்டார்கள். அவர்களே, சமூகத்தில் ஊடுருவி, இன்னல் பல விளைவிக்கும் புல்லுருவிகள்! — என்றார் நேரு.

புல்லுருவிச் "சாது"க்களே! உஷார்! இனியாகிலும் உங்கள் வேஷத்தைக் கலையுங்கள்! நாட்டிற்கு உழையுங்கள்!

●

## ஈயக் குண்டு!

வயிற்றுக்குள், ஈயக்குண்டு ஒன்று சிறு குடலில் சிக்குண்டு விட்டது. அது இரண்டு மாதங்களாக சிறு குடலிலேயே தங்கி வேதனை மேல் வேதனை அளித்து வந்தது. கடைசியாக உண்மை விளங்கி, இரண சிகிச்சை செய்து அந்த ஈயக் குண்டு வெளியெடுக்கப்பட்டது.

அந்த ஈயக்குண்டு ஒரு சாதாரண கோழி முட்டை அளவுள்ளதாயிருந்தது. அதன் எடை எட்டு அவுன்ஸ் அதாவது அரைபவுண்டு என்பதாகவும் காணப்பட்டது.

இச் சிகிச்சையும், பரிசோதனையும் அம்பாலா சிவில்மருத்துவச்சாலையில் நிகழ்ந்தது:

திருடனுக்குத் தேள் கொட்டிய கதையைப் போலவே, நாற்பது வயதுடைய ஒரு கைதி, இச் சம்பவத்தை அதாவது ஈயம் விழுங்கி விட்டச் சம்பவத்தை யாரிடமும் அறிவிக்காது இரண்டு மாதம் வருந்தினனும்.

அவன் ஈயக்குண்டை விழுங்க நேர்ந்தது எப்படி யெனின், திருடனுக்குத் திருட்டுப்புத்தி... தொண்டையில் இரகசியப்பை தோற்றுவிக்கப் பழகினனும் அக் கைதி! ஈயத் துண்டைப் போட்டு, தொண்டையிலேயே வைத்திருந்து, தண்ணீர் குடித்துப் பழகுவது. சாப்பிட்டு பழகுவது; உரக்கப்பேசிப் பழகுவது!....... அப்படியெல்லாம் பழகி விட்டால் "பிக்பாக்கட்" அடிக்கும் காசுகளை சுலபமாகத் தொண்டையிலேயே எவரும் அறிந்து கொள்ள இயலாதவாறு, மறைத்துக் கொள்ளலாமென்பது அவனது சூழ்ச்சி!

பாவம்! அக் கைதி பழகும் வேளையில் தான், ஓர் நாள் அந்த ஈய உருண்டை வயிற்றுக்குள் நழுவி விழுந்து சிறுகுடலில் சிக்குண்டு சித்ரவதையென வதைத்தது அவனை! கடைசியில், இரண சிகிச்சை வாதையுடன், ஈயக் குண்டு வெளியாக்கப் பட்டது.

பிக் பாக்கட் அடிப்பானேன்? ஈயக் குண்டு விழுங்கி அவதிப்பட்டு வயிற்றை அறுத்து வேதனைப் படுவானேன்? வேண்டும்? வேண்டும்?

●

## தென்னை மரக் கடவுள்!

அற்புத நிகழ்ச்சியா? ஆ! கடவுள் அம்சம்! அதிசயக் காட்சியா? ஊ! ஆண்டவன் கோலம்! விசித்திரப்பிறப்பா? ஓ! கடவுள் அவதாரம்! அறிவைத் தட்டிப் பார்க்காத பேதை போக்குக்கெல்லாம், கடவுள் செயல்! ஆண்டவன் அருள்! ஈசன் சித்தம்! பொதுவாக ஏதும் புரிய வில்லையா? இழு! கடவுளை! எல்லாம் அவன் செயல் என்று கூறு! இது தான் வழக்கு! அதாவது மௌடீகம்!

சரி! வளர்த்தாது விஷயத்திற்கு வருவோம்.

காரைக்காலுக்கு அடுத்தாற்போல் சேலூர் என்ற ஊர் உள்ளது. அங்கே ஒரு தென்னை மரம். அத்தென்னை மரத்தில் தேங்காய்கள் கொத்து கொத்தாய் காய்த்து குலை குலையாய்த் தொங்குகின்றன.

அவைகளில், ஒரு குலை பச்சை நிற இளநீர் காய்களைத் தாங்கி நிற்கிறது. மற்றொரு குலை சற்று பழுத்துத் தேறிய செம்மை நிறக் காய்களைத் தாங்கி நிற்கிறது. அவ்வளவு தான்.

இதிலென்னையா அதிசயம்? ஓ! ஒரே மரத்திலே பச்சை நிறக் காய்களும், செம்மை நிறக்காய்களும் காய்க்கின்றனவே! ஆ! இது சாதாரணத் தென்னை மர மன்று! தெய்வீகத் தென்னை மரம்! ஆண்டவன் உள்ளே புகுந்து வாசஞ் செய்கிறான்! அவனது திருவிளையாடலே பச்சையாகவும், செம்மையாகவும் தோன்றும் தேங்காய்கள்! ஊ! ஊ! ஊ! இத் தென்னை மரமே கடவுள் அவதார வடிவு!

எளிதல் கிடைக்குமா, கடவுள் காட்சி! கிடைத்து விட்டது! விழுந்து கும்பிடுங்கள்! கற்பூரங் கொளுத்துங்கள்! தேங்காய் உடையுங்கள்! சுற்றிச் சுற்றி வலம் வாருங்கள்! கூப்பிடுங்கள் எல்லோரையும்! கடவுள் தரிசனம் பண்ணச் செய்யுங்கள்!

ஒரே திரள் திரளான ஜன சமுத்திரம்! விழுந்து கும்பிடுதுகள்! பள்ார்! பளார்! என்று கன்னத்தில் கதை பாடச் செய்து கொள்ளுதுகள்! சுற்றிச் சுற்றி வலம் வருகுதுகள்! குங்குமம் சாற்றுதுகள்! பூ சொரியுதுகள்!

அட! பாழும் மௌடீக உலகமே, உங்கட்கு பகுத்தறிவே கிடையாதா? தாவர நூல், இயற்கை நூல் எல்லாம் பொய்யா? கடவுள் பிரம்மை ஒன்றுதான் மெய்யா? அப்படியானல், பறக்குந் தட்டையும் விஷ்ணு சக்கரம் என்று விழுந்து கும்பிடுங்கள்! பகுத்தறிவை அடகு வையுங்கள்!

★

## போளூர் [வ. ஆ.] வட்டார தி. மு. க. செயலாளர்களுக்கு

●

"6-11-55 அன்று போளூரில் நடைபெற யிருந்த மாநில மாநாட்டு நிதியளிப்புப் பொதுக் கூட்டம் சில எதிர்பாராத காரணங்களால், 20—11—55-க்கு ஒத்தி வைக்கப்பட்டிருக்கிறது. அன்றுமாலை தோழர். ப. உ. சண்முகம் அவர்கள் தலைமையில் நடைபெறும் அக்கூட்டத்தில் தோழர் மு. கருணாநிதி அவர்களிடம் மாநில மாநாட்டு நிதி அளிக்கப்படும். அதுசமயம், போளூர் வட்டாரத்திலுள்ள தி. மு. (கிளைக்) கழகச் செயலாளர்கள், தங்களது மாநில மாநாட்டு நிதியின் பங்குத் தொகையை அன்றே தோழர். மு. கருணாநிதி அவர்களிடம் அளித்துவிட வேண்டுகிறேன். செய்லாளர்கள் உடனடியாக நிதி வசூலில் ஈடுபட்டு வ.ஆ. மாவட்ட தி. மு. க. கோட்டாவை பூர்த்தி செய்ய வேண்டுகிறேன்" என வ. ஆ. மாவட்ட தி.மு.க. செயலாளர் முல்லை சத்தி அறிவிக்கிறார்.

## ஏஜெண்டுத் தோழர்களுக்கு

வணக்கம். பட்டியல் நிலுவையைக் குறித்து அனைவருக்கும், மடல் வரையப்பட்டுள்ளது.

நிலுவையுள்ள தோழர்கள் உடனே பட்டியல் தொகையை அனுப்பி வைக்க வேண்டுகிறோம்.

முன்பணத்தைவிட நிலுவை அதிகரித்துவிட்ட தோழர்களுக்கு கண்டிப்பாக பத்திரிகை அனுப்ப இயலாது என்பதை தெரிவித்துக் கொள்கிறோம்.

—நிர்வாகி 'திராவிடன்'


# திராவிடன்

சென்னை : 11—11—55 : வெள்ளி


## வெறியும் -- விளைவும்

கடந்த சில ஆண்டுகளாகவே குழம்பிக்கிடக்கும் இலங்கைத் தீவின் உள்நாட்டு அரசியல் நிலமை மொழிப் பிரச்னையின் காரணமாக இப்போது மிகவும்நெருக்கடியான கட்டத்துக்கு வந்திருக்கிறது.

ஜனநாயகம் கேலி பேசப்படுகிறதாகவும் ,அன்பும் அமைதியுமே மனித வாழ்க்கையின் குறிக்கோள் என்று போதித்துச் சென்ற புத்தபிரானின் சீடகோடிகளான பொங்கிகளின் 'வெறி' எல்லை மீறி வழிந்தோடுவதாகவும் இலங்கைச் செய்திகள் நமக்குத் தெரிவிக்கின்றன.

இத்தகைய விரும்பத்தகாத சூழ்நிலைக்கு காரணபூதமானவர்கள், இலங்கைத் தீவின் அரசியல் வாதிகளா, அல்லது அவர்களுக்கு 'அர்த்தமே இல்லாத' ஒருவித துணைக்கலை வளர்த்துக்காட்டிய இந்தியாவின் ஆட்சி பீடந்தாங்கிகளா என்பது சிந்திக்கவேண்டிய தொன்றாகும்.

அடிப்படைக்காரணம் எதுவாக இருப்பினும், அங்கு தமிழன் வதைபடுகிறான்; தமிழ் மொழி கேலிபேசப்படுகிறது. ஆண்டாண்டு காலமாக நின்று நிலவி வந்த தமிழர்—சிங்களவர் ஒற்றுமைக்கு இன்ம நொடிப்பொழுதில் சமாதி கட்ட சூழ்ச்சி நடக்கிறது.

இந்தச் சூழ்ச்சியின்விளைவு கிணறு வெட்ட பூதம் புறப்பட்ட கதையாக முடிந்துவிடக் கூடாது என்பதுதான் நமக்கிருக்கும் கவலை.

இலங்கைத் தீவின் பெருவாரியான மக்கள் சிங்களவர் என்பதை யாரும் மறுக்கவில்லை. அதே நேரத்தில், தமிழ்மொழி பேசுவோர் தொகையை சிறுபான்மை என்று சொல்லிவிடவும் முடியாது.

ஏனென்றால் இலங்கையின் மக்கள் தொகையில் தமிழர் தம் எண்ணிக்கை 'சிறுபான்மை' என்கின்ற வார்த்தைக்கு இருக்கும் இலக்கணத்துக்கு அப்பாற்பட்ட ஒன்றாகும். சிங்கள இனத்துக்கு அடுத்த தேசிய இனம் தமிழ் இனம் தான்.

இலங்கைத்தீவின் வாழ்வு—தாழ்விலே தன்னுடன் சரி சமப் பங்கேற்று உழைத்த மற்றொரு தேசிய இனத்தை எண்ணிக்கை காரணமாக இழிவுக்குள்ளாக்குவது எவ்வளவு அருவருக்கத்தக்கது என்பதை சிங்களப் பெருமக்கள் உணர்ந்து பார்க்கத் தவறியிருப்பது வருந்தத்தக்கதாகும்.

ஜனநாயகச் சூழ்நிலையிலே, எண்ணிக்கைக்கிருக்கும் மதிப்பும் மிடுக்கும் குறைத்து மதிப்பிடக் கூடியதல்ல என்றாலும், குறைவான எண்ணிக்கைக்கு இருக்கும் முக்கியத்துவம் குறைந்ததெனச் சொல்ல முடியாது.

ஜனநாயகம் என்றாலே 'மெஜாரிடி' என்கிற அடிப்படையில் காரியங்கள் இயற்றப்படுமானால், நாட்டிலே சட்டமும் திட்டமும் என்றும்போல் இருக்கும். ஆனால் அமைதியும் சுபிட்சமும் எட்டாக் கனியாகி விடக்கூடும். அரசாங்கம் இருக்கலாம்; அதற்குரிய கண்ணியத்துடன் இயங்க முடியாது.

இலங்கைத் தீவில் கொழுந்துவிட்டெரியும் சிங்கள வெறி, அந்த நாட்டின் நல் வாழ்வுக்கு பெருந்தடைக் கல்லாக அமைந்துவிடக்கூடும்.

இந்தக் கருத்தை உறுதிசெய்யும் முறையிலேயே, இலங்கைத் தீவை அரசாளும் கட்சியைச் சேர்ந்தவர்—ஆட்சி பீடத்தில் அமைச்சர் பதவி வகிக்கும் தமிழர் — வி. குமாரசாமி என்பவர் சமீபத்தில் பேசியிருக்கும் பேச்சிலே மிகத்தெளிவாக அங்குள்ள தமிழர்கள் நிலையை எடுத்து விளக்கி இருக்கிறார்.

"சிங்களம் மட்டுமே இலங்கையின் தேசிய மொழியாக இருப்பதை எந்தத் தன்மானமுள்ள தமிழனும் சகித்துக்கொள்ள மாட்டான்."

இப்படிப் பேசியிருக்கும் அமைச்சர் குமாரசாமி, தமிழ் மொழிக்கு சம அந்தஸ்து தரப்பட வில்லையானால்' அடுத்து நடக்கப் போவது எதுவாக இருக்கும் என்பதையும் சொல்லி விட்டார். அதாவது. இலங்கைத் தீவில் ஒரு தனித்தமிழ் மாநிலம் அமைத்துக் கொள்வார்களாம்! அப்போதுதான் நாட்டின் ஒற்றுமையும் அமைதியும் பாதுகாக்கப்படுமாம்!

குமாரசாமியாரின் இந்தச் சூளுரைக்கு ஆளும் கட்சி எந்தவிதமான பரிகாரம் தேடப்போகிறதென்பது வேறு விஷயம். விவகாரத்தை இந்த அளவுக்கு வளர்த்துவிட்டது எல்லை மீறிய மொழி வெறிதான் என்பதை இங்குள்ள இந்தி வெறியர்கள் உணர வேண்டும்.

## பேராசிரியர் இருதயராஜ் மறைவு

திருச்சி புனித சூசையப்பர் கல்லூரிப் பேராசிரியரும், 'திராவிட நாடு' இதழில் தொடர்ந்து கட்டுரை எழுதி வருபவரும், அண்ணாவின் நெருங்கிய நண்பரும், நமது இயக்க அனுதாபியுமான பேராசிரியர் ஏ. இருதயராஜ எம். ஏ. அவர்கள் நேற்று (5—11—55) மாலை 7.30.மணிக்கு இயற்கையெய்தினார்.

5—11—55 மாலை, கல்லூரியிலிருந்து வீடு திரும்பியதும் தோழர் என். சாம்பு அவர்களின் இல்லத்திற்கு வந்து திருச்சி நகரசபை விஷயமாகப் பேசிக் கொண்டிருக்கும் போதே திடீரென்று மயக்கமுற்றுக் கீழே சாய்ந்தார்; உடன் உயிர் பிரிந்தது.

6—11—55 ஞாயிறு மாலை 5.மணிக்கு எடத் தெருவிலுள்ள அவர் வீட்டிலிருந்து, ஏராளமான இயக்கத் தோழர்களும், நகரசபை உறுப்பினர்களும், கல்லூரி ஆசிரியர்களும், மாணவ மாணவிகளும் அடங்கிய சவ ஊர்வலம் நடைபெற்று, இரவு 7–மணிக்கு சவ அடக்கம் செய்யப்பட்டது. திருவாளர்கள் இராட், நசுருதீன் எம். எஸ். மணி. எஸ். பிரான்சிஸ், ரம்போலா மாஸ்கானுஸ் ஆகியோர் இறுதி வணக்கம் தெரிவித்து, அவர் செய்த சேவைகளைப்பற்றி பேசினர்.

தோழர் இருதயராஜ அவர்களுக்கு வயது 38 ஆகிறது. அவர் 15 ஆண்டுகளாகக் கல்லூரிப் பேராசிரியராகவும், 7 ஆண்டுகளாக நகராண்மைக் கழக உறுப்பினராகவும் பணியாற்றியுள்ளார்.

பேராசிரியராக இருந்துகொண்டே பொதுநலப் பணியில் அரும்பாடு பட்டு உழைத்த பேராசிரியர் அவர்களது மறைவு குறித்து, அவரை இழந்து தவிக்கும் உற்றார், உறவினர் அனைவருக்கும் எமது ஆழ்ந்த அனுதாபத்தைத் தெரிவித்துக் கொள்கிறோம்.

## திராவிட மாணவர் முன்னேற்ற கழக
# 2-வது மாநில மாநாடு

### சென்னையில் டிசம்பர் திங்களில் கூடுகிறது

திராவிட மாணவர் முன்னேற்றக் கழகம், புது முறுக்கோடு—மறுமலர்ச்சியுடன் பணியாற்றவேண்டிய கட்டம். அதற்கு வேண்டிய திட்டத்தைத் திறமையோடு தீட்டவும், தியாகத் தீயில் குளிக்கவும் நம்மிடையே உள்ள தீரர்கள் ஏராளம்.

மாணவர் மாநாட்டிற்கு வரவேற்புக் குழு அமைக்கும் வாய்ப்பினை சென்னை திராவிட மாணவர் பெற்றிருக்கின்றனர்.

திராவிட மாணவர் முன்னேற்றக் கழக மாநில மாநாட்டு வரவேற்புக் குழு, சென்னை–இராயபுரம் 'அறிவகத்'தில் 13—11—55 காலை 10 மணிக்கு நடைபெற ஏற்பாடுகள் செய்யப்பட்டுள்ளன.

திராவிட மாணவர் முன்னேற்றக் கழகத்தின் பணியில் அக்கறை கொண்டோர்—அன்பு கொண்டோர், அத்தனை மாணவரையும் 13-ந் தேதி காலை 10 மணிக்கு 'அறிவகத்'திற்கு வருகை தருமாறு அன்புகுழைந்து வேண்டிக்கொள்கிறேன்.

எல்லாக் கல்லூரிகள் மட்டுமல்ல—உயர்நிலைப் பள்ளிகள், தொழிற் கல்லூரிகள் (சட்டக் கல்லூரி, மருத்துவக் கல்லூரிகள் ஆசிரியர் பயிற்சி கல்லூரிகள் போன்றவைகள்) அனைத்தும் குறைந்தது 2பிரதிநிதிகளையாவது அனுப்பி, மாணவர் கழகம் வலிவும் பொலிவும் பெற கருத்துக்கள் நல்கி ஒத்துழைக்க அருள்கூர்ந்து வேண்டுகின்றேன்.

13—11—55 ஞாயிறு காலை 10 மணி

'அறிவகம்' — இராயபுரம் — சென்னை

திராவிட மாணவர்கள் நமது விடுதலைப் பட்டாளத்தின் முதல் வரிசையினர்!

அந்தப் பெருமைக்கேற்ற பெற்றி நம்மிடம் உண்டு என்பதை நிரூபிக்கத் தவறாதீர்!

அன்பன்,

கே. ஏ. மதியழகன்

# பாலைவன ரோஜா!

28—10—55 தொடர்ச்சி

12

காட்சி—27

இடம்: பொன்னுரங்கத்தின் வீடு.

நிலைமை [கோகிலம் தனித்திருக்கிருள். பலவேசம் உள்ளே நுழைகிருன்.]

பல : பொன்னுரங்கம் !

கோகி : அப்பா — வெளியில்.

[நகை முகங்காட்டி கட்டிலிலே அமருகிருன் பலவேசம்]

கோ : உட்கார வேண்டாம்—போய் விடுங்கள்.

ப : பொன்னுரங்கம் வீடு...... என் வீடு! இங்கே உட்காருவதற்குக் கூட தடை போடுகிருயே!

கோ : நீங்கள் தேடி வந்ததோ அப்பாவை—அவரோ வெளியில்! இங்கே எதற்காக உட்கார வேண்டுமென்று தான் கூறினேன்.

ப: அப்பா இல்லாதது தெரிந்து தான் இங்கே வந்தேன்.

கோ : இல்லாதது தெரிந்தும் வந்திரா? ஏன்? எதற்காக?

ப : உன்னிடம் சொல்ல நினைத்ததைச் சொல்லிப் போவதற்காகத்தான்.

கோ : என்னிடம் பேசுவதற்கு என்ன இருக்கிறது ?

ப : நிறைய இருக்கிறது.......நீதானே ராஜத்தின் அன்புத் தோழி !

கோ : அதற்காக...... !

ப : அதற்காகத்தான் உன்டம்பேச வந்திருக்கிறேன். ராஜத்தின் மீது உயிரை வைத்திருக்கிறேன். அந்த என் ஆசைக்குரியவளுக்காக ஏங்கித் தவிக்கிறேன். என் நிலையை நீயாவது எடுத்துச் சொல் அவளிடம்.

கோ : ராஜத்தின் தோழி தான் நான். ஆனல், உமது எண்ணங்களைத் தாங்கிச் செல்லும் தூதுக்காரியாக மாட்டேன்.

ப : அப்படிச் சொல்லாதே கோகிலா, என் ஆசைகள் சரிந்து விடும். நான் வேதனைக்காட்டிலே உலவுவதை நீயும் விரும்புகிருயா?

கோ : ராஜம் இன்னெருவரின் காதலி! அந்தக் காதல் வாழ்விலே நானே;நீங்களோ; அல்லது யாராவது குறுக்கிட்டாலும் அது ஆபத்தானதாகத்தான் முடியும்.

ப : உரிமைக்காரன் நானிருக்க ஊதாரிக்கா அவள் சொந்தமாவது?

கோ : உரிமை—உறவுக்குத் தான், உள்ளத்துக்கல்ல, ராஜம் சிறகு வளர்ந்த பறவை, அவளது பாதையைத் தேடிக்கொள்ள அவளுக்குத் தெரியும். எதிர்கால இன்ப வாழ்வுக்காக நெஞ்சத்திலே எழிலோவியத்தைத் தீட்டியிருக்கிருள் ராஜம்......அதையாரும் அழிக்கவே முடியாது.

ப : அழிக்கும் சூழ்நிலை உருவாவதற்கும் முன்னதாக, தானே, அழித்துக் கொள்ளுவது-புத்திசாலித்தனமானது.

கோ: வலையில் சிக்கிய மானுக்கே மீண்டும் வலை வீசுவது புத்தி சாலித் தனமாகாது !

ப : வலை வீசவில்லை நான்.... மானை விடுவிக்க வலையைஅறுத்து விடுகிறேன். என்னைப்பற்றி நீ சரியாகப் புரிந்துகொள்ளவில்லை.

கோ : உங்களைப்பற்றி எவ்வளவு புரிந்து கொள்ள முடியுமோ அவ்வளவைப் புரிந்துவைத்திருக்கிறேன். ராஜத்தை ஆற்றோரத்திலே வழி மறித்து வம்பு செய்ததிலிருந்து வீரன் படமெடுத்துத்தந்த அந்த விரசக் காட்சிவரை புரிந்துதான் வைத்திருக்கிறேன்,

ப : வீரன் படமெடுத்ததைப் பார்த்தாயா ?

கோ : ஆமாம் நானேதான் பார்த்தேன்......அந்த ஒரு படத்தை வைத்துக்கொண்டே ராஜத்தின் காதல் மலரைக் காலால் மிதித்துக் கசக்கி விடலாமெனக் கனவு காண்கிருய், அதுதான் முடியாது. நீயும்-ராஜமும் பக்கத்துப் பக்கத்திலே யிருக்க வேண்டுமென்ற ஒரு சபலத்தால் ...அந்தப்படமெடுத்துக் கொண்டதாக முதலில் நான் நினைத்தேன், இப்போதுதான் நீ வழிமறித்ததும், படமெடுத்ததும் எந்தக் காரணத்துக்காக யென்று புரிகிறது.

ப : புரிந்துவிட்டதல்லவா...... இனிமேலாவது உச்சி மலைமீது நின்று கொண்டு உரத்தகுரலிலே பேசு !

கோ : உரத்த குரலிலே பேசத் தான் போகிறேன். ஆனல், உம்மிட மல்ல......உனது போலி வேடத்தை நம்பிய ஏமாளிக

மா. தங்கவேலர்

ளிடம் எடுத்துச்சொல்லப் போகிறேன். சூழ்ச்சித் திரையை அறுத்து உண்மையின் உருவத்தைக் காட்டப்போகிறேன்.

ப : நான் தொங்கவிட்டிருக்கும் சூழ்ச்சித்திரையை அறுக்க உன் கரங்களுக்கு அவ்வளவு வலுவாயிருக்கிறது...ஹா...ஹா

[சிரித்துக்கொண்டே அவசர அவசரமாக வெளியேறுகிருன் பலவேசம். அவனதுமுகத்திலே கலவரக் கோடுகள் அப்பிக் கிடக்கின்றன]

காட்சி—28

இடம் : வள்ளியின் வீடு.

நிலைமை [வள்ளி புதிய நாட்டியமொன்றை ஆடிப் பழகிக் கொண்டிருக்கிருள். மறைந்திருந்து சிறிது நேரம் ரசித்து விட்டு உள்ளே நுழைகிருன் பலவேசம்]

பல ; அற்புதம் கண்ணே ! அற்புதம் !... நெஞ்சைத் தேனுக்கும் இம்மாதிரியான புத்தம் புது நாட்டியங்களை உன்னல் தானே ஆடிக் காட்ட முடியும். ஏன் மௌனியாகி விட்டாய்...துவக்கத்திலேயே வரவில்லையென்று கோபமா...இல்லை வெட்கமா?

வள்ளி : அந்த சர்க்கரை மொழிகள் இனி எனக்கு வேண்டாம்?

ப : ஏன் அன்பே?

வ : அப்படி அழைக்காதீர்கள்

ப : முனிக்கோலம் பூண்ட மணிகேலையாகி விட்டாயா?

வ : இனி மணிமேகலையாக இருப்பதாகத்தான் உத்தேசம்

ப : காதல் உலகம் கசந்து விட்டதா?

வ : காதல் உலகமா? அப்படி ஒரு உலகம் இருப்பதாகவே எனக்குத் தெரியாதே !

ப : இதோ என்னைத் தெரிகிறதல்லவவா ?

வ : நன்ருகத் தெரிகிறது !

ப : நல்ல வேளை....! இதுவரை உன்னேடு பழகி வந்தேனே...... என்னை யாராக நினைத்து வந்தாய் ?

வ : என் கலைத் தொழிலுக்கு அறிமுகமான ஒருநண்பன் என்று தான் கருதி வந்தேன்.

ப : அப்போது நீ உதிர்த்த அன்புப் பேச்சுக்கள் !

வ : கலைச் சிகரத்தின் உச்சியிலிருக்கும் போது என்னிடமிருந்து பிறந்த உற்சாக மொழிகள் தான் அவையெல்லாம்.

ப : இப்போது உற்சாகமில்லையா உன்னிடம்.

வ : கலைத் தோட்டத்தின் புதிய பகுதியிலே என் கண்ணேட்டம் பதிந்து கிடக்கிறது... நான் கலையரசியாக வேண்டும்—இது என் கனவு

ப : உன் வாழ்வுக் கனவுக்கு நான் என்றுமே வைரியாக யிருந்ததில்லையே!

வ : நீங்கள் வைரியல்ல...அந்த எண்ணமும், சாகச மொகழிளுந் தான் இப்போது எனக்குத் தொல்லையாகிவிட்டது. நான் கலைக்கனவு காணத் துவங்கிவிட்டேன். அந்த நினைவு இப்போது நெஞ்சோடு ஒட்டிக்கொண்டு விட்டது.

(காட்சி-28 முடியவில்லை)

●



## பொறையார் அழகிரிப் படிப்பகத்தாரின் வேண்டுகோள்

27—8—55 சனிக்கிழமை அன்று பேராசிரியர் க. அன்பழகன் அவர்களைக்கொண்டு திறப்புவிழா நடைபெற்று தனியான வாடகைக் கட்டிடத்தில் அழகிரிப் படிப்பகம் நடைபெற்று வருகிறது. அழகிரிப் படிப்பகம், மேலும் மேலும் விரிவடைந்து பணி புரிய நல்ல புத்தகங்கள் தேவை. அதை நிறைவு செய்ய, புத்தகங்கள் நன்கொடையாக அளித்தால் — நேரிடையாகவோ, அஞ்சல் வழியாகவோ—மிக உதவியாயிருக்கும். தோழர்கள் ஆவன செய்து உதவிபுரிய வேண்டுமாறு கேட்டுக்கொள்வதாக, படிப்பக பொறுப்பாளர் எம். எச். எம். அபுபக்கர் அறிவிக்கிருர்.

One side of the page is dark



# புல் முளைத்துப் போகவில்லை

பழுக்கக் காய்ந்திருக்கும் இரும்புக் கனியை எப்படி வேண்டுமானுலும் வளைத்துத் திருப்பி, அடித்து நீட்டி நாம் விரும்புகின்ற உருவம் கொடுத்து விடலாம் என்பது உண்மைதான்; அதற்காக காய்ந்திருக்கும் இரும்பை வெறும் கத்தியும் கட்டாரியும், குத்தீட்டியும் கொடுவாளுமாகச் செய்து குவித்து விடுவது விவேகமற்ற செயல் மட்டுமல்ல, நமக்கு நாமே புதைகுழி தோண்டிக் கொள்வதுமாகும்.

டெல்லி ஏகாதிபத்தியமும் இத்தகைய விவேகமற்ற போக்கிலே தான் போய்க் கொண்டிருக்கிறது. சுதந்திரப் போரிலே ஏற்பட்ட ஐக்கியமும் உறவும் என்றென்றும் நிலைத்து நின்றுவிடும் 'சிரஞ்சீவி' வரம் பெற்றதாக நினைத்துக் கொண்டு உலகத்திலே எந்த ஏகாதிபத்தியமும் கையாளாத அளவு சதுரங்கம் ஆடிக்கொண்டிருக்கிறது. டெல்லி ஆட்சி.

ஆண்டாண்டு காலமாக அந்நியன் பிடியில் சிக்குண்டு தவித்த மக்களின் உள்ளங்களிலே நிரம்பி இருந்த உணர்வைதான் வளர்வதற்குச் சாதனமாகப் பயன்படுத்திக் கொண்ட ஒரு சில வடநாட்டுத் தலைவர்கள் பழுக்கக் காய்ந்திருக்கும் இரும்பின் நிலையிலே உள்ள மக்கள்சமுதாயத்தைவிரும்பத்தகாத விளைவுகளை உண்டாக்கும்பயங்கரநிலைமைக்கு ஆளாக்கி வருகின்றனர்.

உரிமையும் சுதந்திரமும் வேண்டுமெனக் கோரி நின்ற உள்ளத்திலே, இப்போது ஐக்கியம், பரந்த தேசியக் கண்ணேட்டம் என்பது போன்ற நச்சுவிதைகளைத் தூவி நாட்டை நாஜிகள் கூடாரமாக்குகின்றனர்.

இந்தியாவிலே பெயரளவில் தான் ஜன நாயகம் இருப்பதாகப் பறை சாற்றப்பட்டு வருகிறதே தவிர, நாட்டைத் தாங்கி நிற்கும் தூண்களாகத் தங்களை உருவகப் படுத்திக் கொள்ளும் தலைவர்களின் செயல்களிலே, அவர் தம் பேச்சுக்களிலே ஜன நாயக மணங் கமிழ்கிற தென்று எந்த அரசியல் வாதியும் துணிந்து சொல்ல முடியாது.

குடியரசுத்தலைவர் ராஜேந்திரர் தென்னுட்டிலே பவனி வருவது மட்டுமல்ல, ஒரு சில வாரங்களை இங்கே கழிக்கவும் திட்டமிட்டிருக்கிருராம் : எதற்காக?

நாட்டின் ஒற்றுமையைக் காப்பாற்ற !

நேரு அவர்கள் செல்லுகின்ற இடத்திலெல்லாம் அவரிடம் சமிர்க்கப்படும் குறைகளுக்கெல்லாம் வழக்கமாகச் சொல்லும் ஓரே பதில்

" நாட்டின் பரவலான சுபீட்சத்தைமட்டுமே மனதிற்கொண்டு இருக்கின்ற சிறு சிறு குறைபாடுகளைக் களைந்தெறிய வேண்டும் " என்பது தான் !

மாநிலங்களின் எல்லைக் கோடுகள் போன்ற அற்ப விவகாரத்துக்காக, இந்த அணுயுகத்தில் சண்டை போட்டுக் கொள்வது, உள்நாட்டு அமைச்சர் பந்த் பண்டிதருக்கு ஆச்சரியமாயிருக்கிறதாம்.

எந்த மாநிலத்தின் எல்லைக் கோடு எப்படி இருந்தாலென்ன? எல்லாம் இந்தியாவில்தானே இருக்கிறது! — இது ஆச்சாரிய கிருபாளனியின் அசகாய சூரத்தனமான ஆராய்ச்சி! இன்னும், கேஸ்கர், லால்பகதூர் சாஸ்திரி நந்தா போன்ற குட்டி தேவதைகளும் இது போலவே கூப்பாடு போட்டுவருகின்றன.

இவைகளுக்கு ஒத்தூதும் வகையிலேயே, சென்னை மந்திரிகளும் "ஏக இந்தியா"—எல்லாம் ஒரே நாடு என்ற திருப்பதிகத்தை தினந்தோறும் பாட ஆரம்பித்து விட்டனர்.

இத்தனைபேருடைய கூக்குரலையும் அமைதியாக ஆனல் அருவருப்புடன் கேட்டுக்கொண்டு வருகிறது — குறிப்பாக தென்னுட்டு மக்கள் சமுதாயம். இந்த அருவருப்புடன் கூடிய அமைதியைக் கண்டுதான் சமீபத்தில் சென்னை வந்த நேரு பண்டிதர் கூட, அமைதியான தென்னுடு, இதம் கொடுக்கும் தென்னுடு என்று ஜமாய்த்துத்தள்ளிவிட்டுப் போய்விட்டார்.

ஆனல் தெற்கிலே நிலவும் அமைதி . இருக்கிறதே அது— அந்த அமைதி ஆழ நீரோட்டத்தின் அடையாளமாகும்; பாயப் போகும் புலி சரியான குறிவைக்கப் பதுங்குகின்ற நிலைமைக்கு ஒப்பானதாகும்,

இப்படி சொல்வது மிகைப் படுத்திச் சொல்கின்ற வெறும் வார்த்தைக் கோர்வையல்ல, ஏனென்றுல், ஏக இந்தியா, அனைத்திந்திய ஒற்றுமை,எல்லாம் நாட்டுக்காக என்பது போன்ற உபதேசங்களெல்லாம், இட்லர் கைபாண்ட வாசகங்களாகும், முசோலினி முழக்கிய சொற்றெருடர்களாகும்.

தனி மனிதனல்ல, தனி இன இனமல்ல, தனியானதொரு கலாச்சாரம்—பண்பாடு கூட முக்கியமல்ல நாடு தான் முக்கியம். நாட்டை பலப்படுத்துவது தான் ஒவ்வொரு நாஜியின் கடமை. மனிதனுக்கு எது தேவை என்பதை நாடு நிர்ணயிக்கும்; எது வேண்டாதவை என்பதை நாடுதான் தீர்மானிக்க வேண்டும்.

இப்படித்தான் இட்லர் தன்னுடைய இறுதிக்காலம் வரையிலே சொல்லிக்கொண்டு வந்தான். அவன் அகராதியில் "நாடு" என்றுல் என்ன பொருள் தெரியுமா? மத்திய சர்க்கார் — தன்னுடைய மேற்பார்வையில் பெர்லினிலே அமைக்கப்பட்டிருந்த நாஜி சர்க்கார் !

பெர்லின் சர்க்கார்தான் நாடு ; அந்த நாட்டை பலப்படுத்துவது தான் ஒவ்வொரு ஜெர்மானியனின் கடமை!

இந்த நீதியிலேதான் இந்த நாட்டின் தலைவர்கள் ஏக இந்திய வாதம் புரிகின்றனர்:

தனிமனிதச் சுதந்திரம் கேலி பேசப்படுகிறது.

தனிநாட்டுக் கிளர்ச்சி கடுமையான அடக்குமுறைக்கு ஆளாக்கப் படுகிறது.

தனி ராஜ்ய நலன்கள் சட்டமே கண்ணீர் வடிக்கும் அளவுக்கு காலின் கீழ் போட்டு மிதிக்கப் படுகின்றன.

ஒவ்வொரு தேசிய இனத்திலும் "எடுபிடி ஆட்கள்" 'விலை' கொடுத்து டெல்லியால் வாங்கப் படுகின்றனர்,

லண்டன் மாநகரத்து வெஸ்ட் மானிஸ்டர் மாதா கோவிலில் காணப்படும் 'அமைதி'—அல்லது சகாராப் பாலையிலே முனகி ஓயும் எல்லையற்ற 'அமைதி' இங்கும் இருக்க வேண்டும் என்று ஆட்சிப் பீடத்தவர் நினைக்கின்றனர்; மரண அமைதி தேவை என்கின்றனர்: உயிரும் உணர்ச்சியும் அற்ற மனிதர்களே நாட்டில் நடமாட வேண்டும் என்று கனவு காண்கின்றனர்.

சூடு குறையாத இரும்புக்கனி இன்னமும் அவர்களிடம் சற்று கிடக்கிறது, பயங்கர ஆயுதங்களை உற்பத்தி செய்கின்றனர், உபயோகிக்கும் விதத்தையும் கற்றுத் தருகின்றனர்.

இறுதியில்......

இட்லர் போன வழி இன்னும் புல் முளைத்துப் போகவில்லை.

—'வளவன்'

## இலங்கை

### சேதவத்தை தி மு. க.

30—10—55 ஞாயிறு மாலை 5மணிக்கு மேற்படிகழகத்தின் உறுப்பினர்கள் கூட்டம் தோழர் கு. புதுமை வாணன் (ர, இரசன்) தலைமையில் கூடியது. செயலாளர் பி, என். சேரன் கழக வளர்ச்சி குறித்து பேசியபின், தோழர்கள், செல்லையா, கலைமணி, ஆகியோர் ஈழத்து அரசாங்க மொழிகளாக தமிழும் சிங்களமும் ஆக்கப்பட வேண்டும், என்பது குறித்து நீண்ட சொற்பொழிவு ஆற்றினர்.

செயலாளராக கு. புதுமைவாணன், துணைசெயலாளராக எஸ். செல்லையா. பொருளாளராக, கலைமணி, பொதுக் குழு உறுப்பினராக பி என், சேரன் செயற்குழு உறுப்பினர்களாக பி, என். சேரன் மா. வேலுசாமி எம், எஸ். அப்பாஸ் இரா. முத்தையா, பி. ஜி தங்கப்பா இரா. லோகிதாசன். சிவராசா கே. முத்தையா. எம். எம், இராசன். ஆகியவர்கள் தேர்ந்தெடுக்கப்பட்டபின் கீழ்க்கண்ட தீர்மானங்கள் நிறைவேற்றப்பட்டன.

ஈழத்து அரசாங்க மொழிகளாக தமிழரும் சிங்களமும் இருக்க வேண்டும் என்று இக் கூட்டம் ஆட்சியாளரைக் கேட்டுக் கொள்கிறது.

தமிழ் நாட்டில் தமிழ் தான் ஆட்சி மொழியாக்கப் படவேண்டும் என்று இக்கூட்டம் விரும்புவதுடன் தமிழுக்காக பாடுபடும் அனைவரையும் இக்கூட்டம் பாராட்டுகிறது.

இ, தி. மு க சார்பில் அண்மையில் மொழி மாநாடு கூடுவதை இக்கூட்டம் பாராட்டுகிறது.

இ தி. மு. க. சார்பில் ஒரு தொழிற் சங்கம் ஏற்படுத்துமாறு இக் கூட்டம் தலைமை நிலைய நிர்வாகிகளை கேட்டுக் கொள்கிறது.

### முன்னேற்ற நாடக மன்றம்

கொழும்பு முத்தமிழ் மன்ற பணிமனையில் 30-10-55 காலை 10-மணி அளவில் எஸ். உல்ஸ்டன் தலைமையில் முன்னேற்ற நாடக மன்ற உறுப்பினர் கூட்டம் நடைபெற்றது.

அவ்வமயம் மன்றத்தாரின் மூன்ருவது முயற்சியாக தோழியர் அருண்மொழி பி. ஒ. எல். அவர்கள் தீட்டிய 'மன்னிப்பு' என்ற நாடகம் பிப்ரவரி திங்கள் இறுதியில் நடத்துவதென்றும், தோழர்கள் கே. ஜி. பாலன் பயிற்சியாளராகவும் மா. முத்துவிநாயகம் காட்சி அமைப்பாளராகவும் பாடல்களை தி இளங்கதிர் எஸ் சுப்பராயன் ஆகியோர் தீட்டுவதென்றும். இசைமேற்பார்வையை, ஆர். சோமநாதனும், து. தம்பிராசாவும் கவனிப்பதென்றும். ஏகமனதாக தேர்ந்தெடுக்கப் பட்டார்கள்.

●



## பம்பாய்-பாண்டுப் தி. மு. க.

3-11-55 அன்று மாலை 7-30-மணி அளவில் தோழர் ஈசாக் இல்லத்தில், பாண்டுப் தி. மு கழக சொ. ப. குழு சார்பில், தோழர் செல்லப்பாண்டி அவர்கள் தலைமையில் ஓர் சொற்பயிற்சிக் கூட்டம் நடைபெற்றது, அதில் தோழர்கள் நம்பி நாராயணன், மா. ஈசாக், கா. சு. சேதுராமன் பால்வண்ண நாதன் முதலியோர் 'ஒந்கியா?' எனும் தலைப்பு குறித்து பேசினர்,

### கோபிசெட்டி பாளையம்

6—11—55 ஞாயிறு காலை 10மணிக்கு கோபி, நகர தி. மு கழக உறுப்பினர் கூட்டம் தோழர் க. பெ. துரை தலைமையில் நடைபெற்றது அதுசமயம் கீழ்கண்ட தீர்மானங்கள் நிறைவேற்றப் பட்டது, பொதுச் செயலாளர் இரா. நெடுஞ்செழியன் அவர்களை அழைத்து நவம்பர் இரண்டாவது வாரத்தில் பொதுக் கூட்டம் நடத்தி அவரிடம் மாநில மாநாடு நிதியளிப்பது, தி. மு. கழக தோழர்களைக் கொண்டு தைப் பொங்கல் திருவிழாவை முன்னிட்டு ஓர் நாடகம் நடத்துவது என தீர்மானிக்கப் பட்டது. பின்னர் வரவு செலவு சரி பார்க்கப்பட்டு, மீதி இருப்புத்தொகை ரு. 30-6-6 பொருளாளர் ஜி. ஏ. பழனியப்பன் அவர்களிடம் ஒப்புவிக்கப்பட்டது.

Best copy available

## திறந்த மடல்

கு. காமராசர் அவர்கள்
சென்னை

முதலமைச்சரவர்களே, நலம் வேண்டுகிறேன், தொடர்ந்து மூன்று வாரங்களாகத் தங்களுக் கடிதம் எழுதுவது குறித்து சற்று அலுப்புத் தட்டலாம். ஏனெனில் நாட்டிலே பஞ்சம், பட்டினி, பசி என்ற சொல்லைக் கேட்டாலே தங்களுக்கு அலுப்புத்தட்டுவதாகப் பேசியிருக்கிறீர்கள். இந்நிலையில் வாரந்தோறும் இவ்வித மடலைப் படிப்பதற்கும் தொல்லையாயிருக்கு மல்லவா!

எனினும் எனது கடிதம் தங்களுக்கு வீண்தொல்லை தராதென்பதைத் தாங்கள் மனதார அறிவீர்களென்ற நம்பிக்கை எனக்குண்டு. எனவே இவ்வாரமும் சிலவற்றை உங்களுக்குக் கூற ஆசைப்படுகிறேன்.

இரண்டொரு திங்கள் வரைக் கூட உங்களை, இந்திரன்-சந்திரன் என்று துதிபாடி வந்த உங்கள் முகாமைச் சார்ந்த ஒருவர்-தமது இதழில் ஏதேதோ எழுதுகிறாரே! இந்த திடீர் மாற்றத்திற்குக் காரணம் என்னவோ அறியேன். இதெல்லாம் உங்கள் கட்சியின் சொந்த விஷயம், இவ்விதம் கேட்பது கூட முறையல்ல என்பதை நான் அறிவேன்,

எனினும், எக்காரணத்தாலோ, பொதுப் பிரச்னைகளில் சற்று அபிப்ராய பேத மேற்பட்டால், உடனே சொந்த விஷயங்களைக் கிளறும் (அந்த சமயம்வரை அச் சொந்தகுறைபாடுகளுக்கு மூலாம் கொடுத்து வக்காலத்து வாங்கி வந்தவர்கள்) நபர்களைத் தாங்கள் பக்க பலமாகக் கொண்டிருப்பதில் இனியாகிலும் சற்று தீட்சண்யத்துடன் இருக்க வேண்டுகிறேன். ஏதோ இதெல்லாம் தங்களின் சொந்த விஷயம், யான் உங்களுக்கு எழுத நினைத்ததை மறந்து விட்டேன்!

தாங்கள் சென்ற வாரம் பெங்களூரில் திராவிட இயக்கத்தார் நடித்த ஒரு நாடகத்திற்குத் தலைமை வகித்து பேசினீர்களல்லவா! அதுபோது நாடகத்தில் புகுத்தப்பட்டுள்ள சீர்திருத்த கருத்துக்களை ஆதரித்து பேசத் துவங்கிய தாங்கள், அப்படி பேசிக்கொண்டே "திராவிட இயக்கத்தார் கேட்கும் நாட்டுப் பிரிவினையால் தமிழ் நாட்டுக்கு நன்மை கிடைக்கும் என்று உறுதியாகத் தெரிந்தால் நானும் அந்தக்கொள்கையை ஆதரிக்க தயாராயிருக்கிறேன்...என்று குறிப்பிட்டு விட்டு —இந்த விஷயத்தை நான் ஏன் பேச வேண்டும். ஏதையோ சொல்ல வந்தேன்-நான் எதையோ பேசிவிட்டேன்......என்று வேறு பாதையில் தங்கள் பேச்சினைத் திருப்பி விட்டீர்கள்.

அக்கூட்டத்தில் தங்களையும் மறந்து—மனதில் ஒளித்து வைத்திருக்கும் உண்மையை உணர்ச்சி வசப்பட்டுக் கூறிவிட்டீர்கள்!

ஆனால், உடனே டெல்லி தேவதைகளின் தாக்கீது பிடிப்பு, தட்டிக் கேட்பார்களே என்ற அச்சம் ஆகியவைகள் உங்களின் உள்ள கருத்தினைமறைத்து வேறு எதையோ பேசவேண்டிய பரிதாப நிலைக்குக் கொண்டுவந்து விட்டது போலும்! முதலமைச்சர் பொறுப்பை சுமந்துள்ள உங்களின் நிலையைக்கண்டு யான் உண்மையிலேயே வருந்துகிறேன்.

கோட்டைக்குள்ளேயோ உங்கள் சீடர்களின் புதுக் குழப்பம்! கோட்டைக்கு வெளியிலேயோ உங்க எசமானர்களின் தாக்கீது!

இந்த வெத்துவேட்டு ஆட்சி பீடத்தில் முதலமைச்சராய் வீற்றிருப்பது தங்களுக்கு எவ்வளவு மனவேதனை அளிக்கிறதோ அறியேன்.

இன்னும் எத்தனை காலத்துக்குத் தாங்கள், உண்மைக்குமாறாக இவ்வித உபதேசம் செய்ய முடியும்? உங்களைப் போன்றோர் டெல்லி ஆதிக்கத்தை வெளிப்படையாகத் தட்டிக் கேட்கும் சூழ்நிலையை காலம் உருவாகப் போவது மட்டும் உறுதி.

தென்னாட்டு மக்களின் உரிமையைப் பறித்து ஆதிக்கப் படலத்தில் ஈடுபட்டுக் கொழுத்துவரும் டில்லி தர்பார் சுந்தரர்களுக்கு உங்களைப்போன்றவர்கள் ஆட்சி பீடத்திலே அமர்ந்துகொண்டு தாளம் போட்டுவர, தென்னாட்டு மக்கள் இன்னும் அதிக காலம் அனுமதிக்கப்போவதில்லை யென்பதை விரைவில் அறிவீர்கள். சிரமம் மன்னிக்கவும்.

வணக்கம்

கூத்தரசன்.

## நடக்க இருப்பவை

★

### மதுரை நகர தி. மா. மு. கழகம்

12—11—55 மாலை 6மணிக்கு, திராவிட மாணவ முன்னேற்றக் கழக 4-ம் ஆண்டு துவக்க விழா அண்ணா திடலில் நடைபெறும். நாஞ்சில், கி. மனோகரன் பி, ஏ.ஆனர்ஸ், எஸ். முத்து எம். சி, மா, பாண்டியன், கு. கிருட்டிணன் ஆகியோர் பேசுவர்,

### கீழதிருப்பாலக்குடி

13-11-55 ஞாயிறு மாலை 6மணிக்கு கீழதிருப்பாலக்குடி தி.மு. கழக துவக்க விழா தோழர் என். அருணாசலம் தலைமையில் நடைபெறும். அவ்வமயம் தி. மு. கழக துணைப்பொதுச் செயலாளர் என், வி. நடராசன், தோழர்கள் ப. நாராயணசாமி, து, தியாகராசன், கோ. சிவஞானம். ஆகியோர் பேசுவர்.

---

### மதுரையில் கி. மனோகரன் சொற்பொழிவுகள்

11-11-55 மாலை 4-மணிக்கு
—தியாகராசர் கல்லூரி

,, மாலை 6-மணிக்கு
—அமெரிக்கன் கல்லூரி

12-11-55 மாலை 6-மணிக்கு
தி, மா, மு, கழக நகரக்கிளை 4-ம்ஆண்டு துவக்கவிழாக் கூட்டம்,

### கவிஞர் கண்ணதாசன் இலங்கைப் பயணம்

'தென்றல்' ஆசிரியர் கவிஞர் கண்ணதாசன். 7—11—55 காலை 11 மணிக்கு சென்னை-மீனம்பாக்கம் விமான நிலையத்திலிருந்து இலங்கைக்கு புறப்பட்டார், ஏராளமான கழகத் தோழர்களும். படிப்பகம். மன்றத் தோழர்களும் விமான நிலையத்திற்கு வந்து கவிஞர் கண்ணதாசனை வழிஅனுப்பிவைத்தனர்.

### 'வளர்பிறை'

30—10—55 நாளன்று, அரிசிக்கரை அண்ணா படிப்பகத்தின் சார்பில், தோழர் கே, பி. வேலன் அவர்களை ஆசிரியராகக் கொண்ட "வளர் பிறை" என்னும் கையெழுத்துத் தமிழ் திங்கள் வெளியீட்டின் திறப்புவிழா தோழர் என். கே, மூர்த்தி அவர்கள் தலைமையில் சிறப்புற நடைபெற்றது. அவ்வமயம் மதுரைத் தோழர் சோமசுந்தரம் அவர்கள் தமிழ்த் தொண்டு பற்றி விரிவுரையாற்றிய பின் மலரினைத் திறந்து வைத்தார். அதன் பின் தோழர்கள் கே. பி. வேலன், சி. இராவணன் ஆகியோரின் சொற்பொழிவுக்குப் பின் கூட்டம் இனிது முடிவடைந்தது.

### தாழ்த்தப்பட்டோர் சம்மேளனம் இலங்கை

இராமநாதபுரம் மாவட்டம் செல்வராசன் கோட்டை தாழ்த்தப்பட்டோர் சம்மேளனத்தின் மாதாந்திரக் கூட்டம் 3-11-55ல் கொள்ளுப்பட்டி காலிவீதி 610/4. எண் இல்லத்தில் பெரியார் துரைச்சாமி அவர்கள் தலைமையில் நடைபெற்றது.

தலைவர் முன்னுரைக்குப்பின் செயலாளர்—பொருளாளர் ஆகியவர்களால் கடந்த கூட்ட நிகழ்ச்சி, வரவு-செலவு கணக்கு, கடிதக் குறிப்புகள் ஒப்புக் கொள்ளப்பட்டது. பொருளாளர் சு, கு. மாயக்கிருஷ்ணன் அவர்கள் தலைமையில் 5 பேர் கொண்ட கணக்கு பரிசீலனைக் கமிட்டி அமைக்கப்பட்டது.

விவாத அரங்கில் "தோழர்களான சி, விஸ்வநாதன், க. சிவானந்தம். க.நீ. ஆறுமுகம், கு, லெட்சுமணன், தூ. வே. இராக்கன், கு. நமசிவாயம், சு, கு. மாயக்கிருஷ்ணன், இரா. ச. பொன்னம்பலம் மற்றும் பலரும் பங்கு பெற்று சிறப்பித்தனர், பொருளாளர் மாயக்கிருஷ்ணன் அவர்களால் தேனீர் விருந்தளிக்கப்பட்டது. செயலாளர் சிவானந்தம் நன்றி கூற கூட்டம் இனிது கலைந்தது.

### குறள் நெறிக் கழகப் பணிமனைத் திறப்பு விழா

நுங்கம் பாக்கம் குறள் நெறிக்கழகப் பணிமனைத் திறப்பு விழா 6-11-55 ஞாயிறு காலை 9-மணிக்கு பச்சையப்பன் கல்லூரித் தமிழ்ப் பேராசிரியர். திரு அன்புகணபதி பி. ஓ, எல். அவர்கள் தலைமையில் நடைபெற்றது. கழகத் தலைவர் தோழர் வ. சங்கர நாராயணன் எல்லோரையும் வரவேற்றுப் பேசியபின் தலைவர் தம் தலைமையுரையில்' குறளைப் பரவச்செய்யும் வழிவகைகளை குறித்து நீண்டதொரு சொற்பொழி வாற்றினார். பின்னர் கழகக் காப்பாளர், தோழர் வி. வி. வேங்கட சுப்ரமணியன் கழகப் பணிமனையைத் திறந்து வைத்துப் பேசிய பின் தோழர்கள். சா. சு. மணி, தி. சு. கிள்ளிவளவன், கலைமணி பி.ஏ. ஆனர்ஸ் "காவியம்" ஆசிரியர் கவிஞர். சுரதா ஆகியோர் சொற்பொழி வாற்றினர், செயலாளர் தோழர் இரா. சம்பந்தன் நன்றிகூற கூட்டம் 12-30 மணிக்கு இனிது முடிவுற்றது. முடிவில் வந்திருந்த அனைவர்க்கும் இனிப்பு வழங்கப்பட்டது.

### தமிழ் வளர்ச்சி மன்றம்

சென்ற 30-10-55 அன்று எஸ். என். செட்டித் தெரு 64-ம் எண் இல்லத்தில் தி. மு. கழகக் கொள்கையைக்கொண்ட தமிழ் வளர்ச்சி மன்றம் என்ற ஒரு நிறுவனம் ஆரம்பிக்கப்பட்டது. இதன் தலைவராக போ. ராசரத்தினம் செயலாளராக ஏ. செல்வராசன் துணைச்செயலாளராக பா. ராசமாணிக்கம் பொருளாளராக வ. ராசமாணிக்கம் ஆகியோர் ஏக மனதாக தேர்ந்தெடுக்கப் பட்டார்கள்.

### அழகிரி நினைவுப் படிப்பகம்

6—11—55 ஞாயிறு மாலை 5மணியளவில் வண்ணையம்பதியில் தோழர் பி. யு எஸ் பாபு தலைமையில், தோழர் கணேசன் துவக்கி வைத்தார் பலஇயக்க தோழர்களும் சொற்பொழிவாற்றியபின் கூட்டம் இனிது முடிவுற்றது.



### திராவிடன் சந்தா விவரம்

உள்நாடு.

| | | | | |
|---|---|---|---|---|
| ஆண்டு சந்தா .... | ரூ. | 8 | 0 | 0 |
| ஆறுமாதம் ... | ரூ. | 4 | 0 | 0 |
| தனிப்பிரதி ... | ரூ. | 0 | 3 | 0 |

வெளிநாடு

| | | | | |
|---|---|---|---|---|
| ஆண்டு சந்தா ... | ரூ. | 9 | 0 | 0 |
| ஆறு மாதம் ... | ரூ. | 4 | 8 | 0 |
| தனிப்பிரதி ... | ரூ. | 0 | 3 | 6 |

# நாத்திகத்தின் நன்மைகள்!

ஆங்கிலம் : ஜேம்ஸ் ஹொவே ஜான்சன் ○ தமிழில் : திருவேடம்

[திரு. எஸ். இராமநாதன் அவர்களை ஆசிரியராகக் கொண்ட, ஆங்கில மாத ஏடு "இண்டியன் ரேஷனலிஸ்ட்" (நவ'55) அளித்துள்ள கருத்துக் கருவூலக் கட்டுரையாம் "The Benefits of Atheism" என்பதின் தமிழாக்கமே இக்கட்டுரை.]

●

நாத்திகர்கள் சுந்தர புருஷர்கள். அவர்கள், கடவுள் அல்லது கடவுள்கள், பேய், பிசாசு, பூதம், நரகம், மோட்சம் ஆகியவைகளைப் பற்றி பயங்கொள்ளாதவர்கள். ஏன்? அவைகளெல்லாம், கற்பனைகளென்றும், படியாத, பண்படாத, தெளிவற்ற மூளை உடையவர்களிடந்தான் அவை மண்டிக்கிடக்கும் என்பதும் அவரவர்கள் நன்கறிவர்.

புரோகிதர்களுக்கோ, மடாதிபதிகளுக்கோ, மண்டியிடவோ, வளைந்து கொடுக்கவோ, இசையாதவாகள் நாத்திகர்கள். ஏன்? அவர்களுக்குத் தெரியும், புரோகிதர்களென்போரும், மடாதிபதிகளென்போரும், அறிவிலிகள் பகல் வேடதாரிகள், புல்லுருவிகள்—என்று. இத்தகு பிறவிகளின் வயிற்றுப்பிழைப்பு, மதம் என்றால், இன்னதென்றே விளங்காத குருட்டு அப்பாவிகள் தயவினாலும், குருட்டு நம்பிக்கைக்காரர்களின் தயவினாலும் நடைபெற்று வருகிறது என்பதும் நாத்திகர்கள் அறிந்ததே.

மதம் மதம் என்று நாட்டுச் செல்வத்தை பலவகையாலும் பாழ்படுத்துவதை விட்டு நாட்டிற்கு நல்லனவே செய்யாத, கழுகுமதத் தலைவர்களைக் கண்டிப்பவர்கள் நாத்திகர்கள். நாத்திகர்கள், தாம் கோயில்களுக்குச் சென்று பூஜை, திருவிழா முதலியவைகளைச் செய்யாது ஒழிவதால், பெரும் பொருள் தொகையை விரயமாக்காது, சேமிப்பவர்களாகிறார்கள்.

இவ்வாழ்வே உண்மை, மறுவாழ்வு இல்லை என்பதாக உணர்பவர்கள் நாத்திகர்கள். இவ்வுண்மை வாழ்வில் இயற்கையோடு இயைந்து எவ்வளவு நலமுடனும். மகிழ்வுடனும் வாழவேண்டுமோ அவ்வளவும் வாழ்ந்து இன்பம்டையவேண்டும். முழு வாழ்க்கையையும் வாழ விழைந்து உழைக்க வேண்டும். நலம்பெற வேண்டும். மதத்தைப் பற்றிக் கவலை எற்றுக்கு? அது ஏமாற்று வித்தை! அதன்பால் மயங்கி அருமையான நேரத்தை வீணாக்கக் கூடாது. மறு பிறவியில் என்னாகுமோ என்பது வீண் மருட்சி! அந்த நினைப்பை அறவே விட்டொழிக்க வேண்டும். இந்நிஜ வாழ்வை சீலமுடன் வாழ்ந்து இன்பங் துய்த்தலே சிறந்தது-என்கின்றதான அசையா தெளிவு பெற்றவர்கள் நாத்திகர்கள்.

சாவதற்கு அஞ்சாதவர்கள் நாத்திகர்கள். சாவு என்பது என்ன? அது ஒரு இயற்கை விதி! சாவைத் தவிர்க்கவல்லார் யார்? அது ஒரு நீண்ட—மீண்டும் விழிப்படையா—அமைதித் தூக்கம்! அவ்வளவு தான்! "இறந்தபின் நரகத்தில் தண்டனை" என்பதைக்கேட்க, நகையாடுபவர்கள் நாத்திகர்கள்.

"பரமன் கட்டளை!" விட்டுத்தள்ளு அதனை! பண்டாரங்களின் கைச் சரக்கு அது! உழைக்காது, உண்டு கொழுக்கக் கண்டுபிடித்த குறுக்குச் சாதனையே "பரமன் கட்டளை" என்ற வரட்டு வேதாந்தம்—என்று, எங்கும், எப்போதும்,பயமின்றி எடுத்துரைப்பவர்கள் நாத்திகர்கள்.

ஒரு மதத்தாருக்கும் இன்னொரு மதத்தாருக்கும் எப்போதும் பகை. ஆனால், நாத்திகர்களுக்கு எவரிடத்தும் பகைகிடையாது, எல்லோரும் சமமான மக்கள் என்பது அவர்களது முடிபு. மருண்டு விழும் மூட பக்தர்களிடமிருந்து, மத போதை விரட்டப்பட்டு விட்டால், புரோகிதனும், மடாதிபதியும், மூட்டை முடிச்சுடன் ஓட்டமெடுக்க வேண்டியது தான். அவர்களது உறைவிடமும், சுரண்டல் கூடமுமான கோயில் களெல்லாம் வேறு நற்காரியங்களுக்கு உபயோகப்படும் நாத்திகர்களின் ஆழமான நம்பிக்கை இது. அதோடு சமயச்சண்டைகளெல்லாம் வீணானவை, அர்த்தமற்றவை, அறிவற்றவை அதுவுமின்னியில், அவை, வாதிப்பதற்கும் தகுதியற்றவை.

இம் மண்ணுலகில் அடாது செய்தால், நரகத்தில் படாதபாடு படுவான் என்ற பயமுறுத்தல் வேண்டா. அடாது செய்பவனை இப்போதே, இங்கேயே அதாவது இம்மண்ணுலகிலேயே தண்டித்து, கண்டித்துத் திருத்த முயலல் வேண்டும். அப்படித் திருத்தவும் முடியும். முடிகிறது. இதற்கு நரகம் எதற்கு? "வேத பாராயணம்" "தீர்த்த மகிமை"—எல்லாம் பொருளற்றவை. அவதார திருவிளையாடற் கதைகளெல்லாம் மூடநம்பிக்கையின் பாற்பட்டவை. இயற்கையோடு இயைந்து இயற்கை விதிகளைப் பின்பற்றி ஒழுகும் திறனே அறிவுடைமையாகும்—என்பவைகளே நாத்திகரின் நற்கருத்துக்கள்.

பாவத்திலே பிறந்து, பாவத்திலே வாழும் மக்களே நாம். நம் மதத் தலைவர்களோ கடவுளால் அனுப்பப்பட்டத் தூதுவர். அவரே பாப மன்னிப்பு அளிக்க வல்லார்—என்கின்றதான பகுத்தறிவற்ற வேதாந்தத்தை ஏற்க மறுப்பதோடு, மதத்தலைவர்களுக்கு எந்தவகையிலும் தாழ்ந்தவர்கள் அல்ல தாங்கள் என்று கருதுபவர்கள் நாத்திகர்கள். நாத்திகர்களே பகுத்தறிவாளர்கள். அவர்களை மிஞ்சக் கூடியவர்கள் எவருமிலர். அவர்களே தலை சிறந்த அறிவாளிகள், மக்கள் அனைவரும் சமம். அக்கொள்கைக்கு மாறாக எவ்வித ஏற்றத்தாழ்வுகளையும் கற்பிக்காதவர்கள் நாத்திகர்கள். எல்லோருக்கும் சம உரிமை உண்டென்பவர்கள் அவர்கள். பிறப்பால் உயர்வு காண்பது அவர்களிடம் செல்லாது.

துறவறம் மேற்கொண்டு, தனித்து காட்டையோ, மலையையோ நாடிச் செல்பவர்களல்லர் நாத்திகர்கள். இல்லறத்தினூடே இனிதுவாழ்வை நடாத்தி இன்பம் காண விழைபவர்கள் நாத்திகர்கள், காலாதி காலமாக மக்கள் சகுனங்களாலும், குருட்டுநம்பிக்கைகளாலும் மதக் கோட்பாடுகளாலும், பீடிக்கப்பட்டு அல்லலுறுகிறார்கள்; அச்சூழல்களில் சிக்காது அன்றும், இன்றும், என்றும் வாழவல்லவர் நாத்திகரே.

மத மய்கையில் விழ்ந்துழலும் மக்களுக்கு என்னென்ன அறிவு விளக்கங்கள் ஊட்டவேண்டுமோ அவ்வளவையும் ஊட்டி அவர்களைக் கரை ஏற்றிவிடும் பணியில் உன்னிப்புடன் உழைப்பவர்கள் நாத்திகர்களே. மதமெனும்பேய் மக்களைப் பிடியாதிருந்தால், மக்கள் நல் வாழ்வு வாழவும், நாடு நலமுடன் திகழவும் ஏது வாகும். அப்போதுதான் அனைவரும் சுபீட்சமுடனும், அமைதியுடனும் இன்பமுடனும் நிறைவாழ்வு வாழ முடியும். நாத்திகமே மனிதகுல நலத்தின் திறவுகோல்.

●

## வண்டிப்பெரியாரில் அறிஞர் அண்ணா

25—10—55 மாலை பீர்மேடு தாலுகா வண்டிப் பெரியார் நகர தி. மு. கழகச் சார்பில் மாநில மாநாட்டு நிதியளிப்புக்கூட்டம் நடைபெற்றது. கூட்டத்திற்கு தி. மு. கழக பொர்துக்குழு உறுப்பினர் தோழர் கே. ஏ. கலையழகன் அவர்கள் தலைமை வகித்தார். திரு-கொச்சிப் பகுதியில் தி மு கழகம் பணிபுரியும் முறை பற்றியும். கழகத்தோழர்களின் ஆதரவுள்ள தொழிற் சங்கங்கள் அமைத்திடும் பணிகளில் ஈடுபட்டிருக்கும் முயற்சியைப் பற்றியும் தலைவர் விளக்கினார். அடுத்து அ. பொன்னம்பலனார் அவர்கள் சமுதாயத்திலுள்ள குறைபாடுகளை விளக்கி பேசினார், தோழர் கே. ஏ. மதியழகன் திராவிட நாடு பிரிய வேண்டியதின் அவசியத்தை வலியுறுத்தியும் ஐந்தாண்டுத் திட்டத்தின் பெயரால் தென்னாடு புறக்கணிப்பட்டு சகல துறைகளிலும் வடநாடு முன்னேறுவதை சுட்டிக் காட்டி திராவிட மக்களுக்கு நல்வாழவு வேண்டுமானால் தென்னாடு வடநாட்டு ஆதிக்கத்திலிருந்து விடுபட்டுத்தான் தீரவேண்டுமென பேசியபின் அடுத்து அறிஞர் அண்ணா அவர்கள் பேசுகையில்;

"என்னுடைய வருகை பீர்மேடு தாலுகாவில் பெரும் பீதியைக் கிளப்பிவிட்டிருப்பதாகக் கேள்விப்பட்டேன், திரு-தமிழகத்தைப் பொறுத்த வரை தி. மு. கழகம் எப்பொழுதோ தன்னுடைய அபிப்ராயத்தை திட்ட வட்டமாகத் தெரிவித்திருக்கிறது. மாகாணக் கமிஷன் அறிக்கைக்கும் என் வருகைக்கும் எத்தகைய சம்பந்தமுமில்லை. மலையாளிகள் எங்களைப் பற்றித் தவறாகப் புரிந்து கொண்டிருக்கிறார்கள் என எண்ணுகிறேன். தி. மு. கழம் தமிழர்—மலையாளி சண்டையை விரும்பவில்லை இருக்கின்ற பிரச்னையை எவ்வகையில் சுமூகமாக தீர்க்க முடியுமோ அவ்வகையிலெல்லாம் தன்னாலான சேவைகளைச் செய்து கொண்டிருக்கிறது.

வட நாட்டு ஏகாதிபத்தியம் தான் திரு—கொச்சியிலே உள்ள தமிழர்—மலையாளிகளிடையே சண்டையை மூட்டி விட்டு வேடிக்கை பார்க்கிறது. இதைத்தான் இங்குள்ள தமிழர்களும்—மலையாளிகளும் கவனிக்கவேண்டும்.

அவரவர்களுக்குரிய பகுதிகளை நடுநிலையுடன் நின்று தேர்ந்தெடுத்து அவர்களிடம் ஒப்படைத்து தமிழனும்—மலையாளியும்—ஆந்திரனும்—கன்னடத்தானும் இன அடிப்படையில் ஒன்றுபட்டு நல்லாட்சியின் கீழ் நின்று வாழ பாடுபட எண்ணுவதே தி. மு. கழகம். அண்மையில் திருச்சியில் நடைபெறவிருக்கிற மாநில மாநாட்டு நிதிக்காக வண்டிப் பெரியார் தி. மு. கழகமும் ரூபாய் 200—0—0 நன்கொடை அளித்து. தனக்குள்ள உழைப்பின் பங்கை செலுத்தியது கண்டு தோழர்களின் இப்பெரு முயற்சியைப் பாராட்டுகிறேன்.

இங்குள்ள தமிழர்கள் திருச்சியில் நடைபெற யிருக்கும் தி. மு. க. மாநில மாநாட்டிற்கு வரும் பொழுது. மலையாளிகளையும் அவசியம் அழைத்து வர வேண்டும் அவர்கள் நம்முடைய மாநாட்டைப் பார்க்கட்டும்! கழகக் கொள்கைகளைப கேட்கட்டும்! அப்பொழுது நம்மீதுள்ள சந்தேகத்தை மாற்றிக் கொள்வார்கள்," என நீண்ட தொகுவிளக்கவுரை ஆற்றினார். தலைவர் முடிவுரைக்குப்பின் கூட்டம் முடிவுற்றது.

அறிஞர் அண்ணா அவர்கள் ஆனைக்கல் எஸ்டேட், பெரியார் அணைக்கட்டு, தேக்கடி உணவு நிலையம், பெரியார்மின்சார திட்டவேலைகள் நடைபெறும் நீர்ச்சுரங்கம், ஆகியவைகளைப் பார்வையிட்டார்.

பல்வேறு தோட்டத் தொழிலாளர்கள் சார்பாகவும், கம்பம் தி. மு. கழகம் வண்டிப் பெரியார் நகர தி. மு. கழகம் சார்பாகவும், ஏராளமான கைத்தறி துண்டுகளும்—மலர் மாலைகளும் அண்ணா அவர்களுக்கு அணிவிக்கப்பட்டது.

●

# அண்ணன் தம்பியாகும் விந்தை!

ச. வெ. பாண்டியன்

“சோஷலிச பாணி சமுதாய அமைப்பையே நமது லட்சியமாகக் கொண்டுள்ளோம் இரண்டாவது ஐந்தாண்டுத் திட்டம் இந்த அடிப்படையிலேதான் அமைக்கப்படுகிறது” என்று ஆவடிஜோதி நேருவிலிருந்து, அவரது அடியார்கள் அத்தனை பேர்களும் பேசிடும் கூட்டங்களிலெல்லாம் முழங்கி வருகின்றனர்.

‘சோஷலிச பாணி’ என்ற வார்த்தையைக் கேட்டதும் பலர் மெய்மறந்து விட்டனர்! ஆகா! காங்கிரசும் சமத்துவ சமுதாயத்தை விரும்புகிறது. என்று தப்புக் கணக்குப் போட்டனர். ஏன்? அரசியலிலே நடமாடும் சில அவசரசாமிகளைத் தலைவராகக் கொண்ட கட்சிகள் கூட இன்று மாறிவிட்டன— வார்த்தை ஜாலத்தைக் கேட்டு!

நேரு சர்க்கார் விரும்புவது சமத்துவ சமுதாயம் அல்ல! சமத்துவ சமுதாய மாதிரி! ஒரு பக்கத்திலே கொள்ளையடிக்கும் முதலாளிகள் இருப்பர்! வெளிநாட்டுச் சரண்டல் கழுகுகள் வட்டமிடும்! தனி உரிமைக்கு தக்க வசதி உண்டு! தேசிய மயமாக்குதல் கிடையாது! ஒன்றே ஒன்று! தனியார்போல சர்க்காரும் பெரிய தொழில்களைச் செய்வர்! இதுதான் மாதிரி சோஷலிசத்தின் லட்சணம் என்றதும் பலருக்குப் புளித்துப்போய்விட்டது! கண்துடைப்புக்காகச் செய்து காட்டும் ‘டில்லி சர்க்கஸ்’ காட்சிகளுள் இதுவும் ஒன்றாகி விட்டது!

இன்றைய உலகில் முதலாளித்துவ அல்லது சமத்துவக் கொள்கைகள்தான் அநேகமாக நடைபெற்று வருவதை காண்கிறோம்! அதிலும் குறிப்பாக முதலாளித்துவத்தின் மும்முரமான பிடிப்புகளெல்லாம் தளர்ந்து சமத்துவ வேட்கை உருவாகி வரக்காண்கிறோம்! ஆனால் நேரு அவர்களின் சர்க்கார் முதலாளித்துவத்தையும் பின் பற்றவில்லை, சமத்துவத்தையும் பின்பற்றவில்லை! மாறாக மாதிரி சமத்துவம் என்ற புது (!) கொள்கையை கடைப்பிடித்து வருகிறது!

நேரு அவர்களின் ‘விசித்திரக் கொள்கை’தான் வேறு எங்கும் இதைப் போல யாரும் முயற்சித்ததாய் இருக்காதே தவிர அவர் கருத்துப்படி அந்தக் கொள்கை உன்னதமானதாயும் நாட்டையும் நாட்டு மக்களையும் சுபீட்சப் பாதைக்கு அழைத்துச் செல்லும் திட்டமுடையதாயும் இருக்க நியாயமில்லை! இவருடைய திட்டம் ‘பாலுக்கும் காவல் பூனைக்கும் தோழன்’ என்பது போல் முதலாளித்துவத்திற்கு பாசத்தையும், ஏழைகளுக்கு பாசத்தைப் போன்ற பாவனையையும் காட்டி வருகிறது!

மாதிரி சமத்துவ தத்துவத்தை வைத்துக் கொண்டு மகுடி ஊதி வருகின்றனரே தவிர—மக்களின் மனக்குறையைத் தீர்க்கவில்லை! வேலையில்லாத் திண்டாட்டம் ஓயவில்லை! உற்பத்திப் பெருக்கு இல்லை! ‘வேறு எங்கும் யாரும் முயற்சித்ததில்லை’ என்று பெருமை பேசித் திரிகிறாரே தவிர வேறு எங்கும் இல்லாத முறையில் என் நாட்டுக்குறைகளைப் போக்கி விட்டேன் என்று கூறும் தைரியம் பிறக்கவில்லை அவருக்கு!

அதோ! சீனா! 60 கோடி மக்களைக் கொண்ட மக்கள் சீனா! சோஷலிசம் மாதிரி அல்ல சோஷலிச தத்துவத்தின் அடிப்படையில்—சோஷலிசத்தை உருவாக்கும் முகத்தான் சிறந்த முயற்சிகளைச் செய்து வெற்றிமேல் வெற்றி பெற்று வருகிறது! ‘வேறு எங்கும் யாரும முயற்சித்ததில்லை என்று இறுமாந்து நடக்கும் நேரு பெருமான் சீனாவில் சோஷலிசம் வளர்ந்து வருவதைப் பார்க்க வேண்டுகிறோம்!

மக்கள் சீனாவில் இங்கு நேரு பெருமான் ஆட்சியினர் ஆரம்பித்திருக்கிற ஐந்தாண்டுத் திட்டங்கள் போல் அங்கும் இப்போது முதல் ஐந்தாண்டுத் திட்டம் அமைக்கப்பட்டு செயலாற்றி வருகிறார்கள்!

சீனாவின் முதல் ஐந்தாண்டுத் திட்டம் 1953-ம் ஆண்டிலிருந்து செயலாற்றப்பட்டு வருகிறது. இது சீன அரசியல் சட்டத்தின் குறிக்கோளை நிறைவேற்றும் முறையில்தான் வேலைசெய்து வருகிறது! சீன அரசியல் சட்டம் 4-வது பிரிவு கூறுவதாவது:

‘மக்கள் சீனக் குடியரசை அமைத்த பின் சமத்துவ சமுதாயத்தை உருவாக்க வேண்டும். இந்தக் குறிக்கோளின் அடிப்படையில் படிப்படியாக நாட்டில் சமத்துவதேசிய மயமாக்குதலைச்செய்து விவசாயம், கைத்தொழில், முதலாளித்வ தொழிற்சாலை போன்ற வகைகளில் சோஷலிச சமுதாயத்தை நிறுவ வேண்டும்.

இப்படி வகுக்கப்பட்ட அரசியல் திட்டத்திற் கேற்பவே முதலாவது ஐந்தாண்டுத் திட்டம் வகுக்கப்பட்டிருக்கிறது. சீனாவில், இந்தியாவில் உள்ளதைப்போல் முதலாளிகளும், நிலப்பிரபுக்களும் நிறைய இருக்கிறார்கள் ஆலைச் சொந்தக்காரர்களாக அநேகம் பேர் உலாவி வருகிறார்கள்! நிலப்பிரபுத்துவ—முதலாளித்வ ஆதிக்க பீடங்களையெல்லாம் ஒழித்து சோஷலிசம் காண முயற்சிக்கிறார்கள்!

தனியுடைமைக்கு அங்கீகாரம் கிடையாது! ஆனால் இருக்கின்ற தனியுடைமைகள் தேசிய மயமாக்கப்பட்டு சோஷலிசமாக மாற்றப்படும். படிப்படியாக தனியுடைமையும்—நிலப்பிரபுத்துவமும் ஒடுக்கப்பட்டு—அதன் விஷப்பற்கள் பிடுங்கப்படும், 1957-க்குள் அதாவது முதல் ஐந்தாண்டுத் திட்டம் முடிவதற்குள் அநேகமாகத் தனி உடைமைகளெல்லாம் ஒழிக்கப்பட்டு சமத்துவ சமுதாயம் உருவாகி விடும்.

இது எப்படி உருவாக்கப்படும்! அதனால் எழும் பிரச்னைகள் என்ன! என்பனவற்றிற்கு திட்டக் கமிஷன் தலைவர் லி-பூ-சென் தரும் விளக்கமாவது:

1. ‘சீன மக்கள் பிற்போக்கு ஆட்சியை ஒழித்து நிலப்பிரபுத்துவத்தை மாற்றி விவசாயியின் பிரபுத்துவமாக உருவாக்கி வருகிறார்கள். விவசாயிகள் தற்சமயம் அதிக வாடகை நிலத்திற்கென்று பிரபுக்களுக்கு கொடுக்க வேண்டியதில்லை! அவர்கள் தங்கள் உழைப்பின் மூலம் செழிப்பான வாழ்க்கைக்கு வாய்ப்பைத் தேடிக் கொள்கிறார்கள், அதோடு தேசப் புனருத்தாரணத்திற்கும் உதவுகிறார்கள்,

2 சீன மக்கள் முதலாளித்துவத்தை ஒழித்து, சொத்துக்களை யெல்லாம் மக்களுக்காக்கி இருப்பதால் அவர்கள் இப்போது ‘முதலாளிக்கு லாபம் கிடைக்க’ என்றில்லாமல், ‘நாட்டிற்கு லாபம் கிடைக்க’ என்று உணர்ந்து வேலை செய்கிறார்கள்,

3. இன்றும் தனிப்பட்ட தொழிற்சாலைகளில் வேலை பார்க்கும் தொழிலாளர்கள் முதலாளிக்கு லாபம் கிடைக்க உழைப்பதாக இருந்து வருவதால் முதலாளிகள் சட்டத்தில் குறிப்பிட்டுள்ள அளவுதான் பணத்தை தனக்கு எடுத்துக் கொள்ள வேண்டும்.

4. தொழில் துறைகளும், வியாபாரத் துறைகளும் இரண்டு விதத்தில் மாறுதல்களுக் குள்ளாகப்படும் முதலில் இவைகளெல்லாம் அரசாங்கத்தாரால் எடுத்துக் கொள்ளப்பட்டு அரசாங்கமே அதற்கு முதலாளியாக இருக்கும். இரண்டாவது அரசாங்க முதலாளித்துவத்திலிருந்து (State Capitalism) சோஷலிச (Socialism) மாக மாற்றப்படும்!”

சீனாவில் சோஷலிசத்தை உண்டாக்க கடைப் பிடித்துவரும் போக்குகளே இவைகள்! முதலாளித்வம் ஓரளவுஒழிக்கப்பட்டும் இன்னும் ஒழிக்கப்படவும் சோஷலிசம் காணவும் அவர்கள் கடைப்பிடிக்கும் நோக்கங்கள்தான் மேலே கூறப்பட்டவைகள்!

தொழில்களெல்லாம் சமத்துவமாக்கப்பட்டிருக்கிறது! அப்படி மக்களுக்குச் சமத்துவமாக வழங்கப்பட்ட தொழில் துறைகளில் அவர்கள் தங்களுக்கும் நாட்டிற்கும் லாபம் பெற உழைக்கிறார்கள்! சில இடங்களில் முதலாளிகளுக்காக தொழிலாளர்கள் உழைத்தாலும் அவர்களின் சர்க்கார் சட்டத்தின் மூலம் கட்டுப்படுத்தப்பட்டு சர்க்காரால் எடுத்துக் கொள்ளப்படுகிறது. ஐந்தாண்டுத் திட்ட முடிவிற்குள் சமத்துவ சமுதாயம் பூரணமாக முற்றுப்பெறும்! இத்தகைய நோக்கம்தான் அவர்களின் திட்டங்களிலே—பேச்சுக்களிலே தென்படுகிறது.

எது எப்படி இருப்பினும் முடிவில் சோஷலிசத்தை காணவே அரும்பாடுபடுகின்றனர். இரண்டாண்டுகளாக இந்நோக்கத்தோடு செயலாற்றியும் வருகிறார்கள்.

அண்டை நாடான சீனாவிலே இத்தகைய மகத்தான போக்குகள்—திட்டங்கள்! ஆனால் இந்தியாவில், மகாமேரு நேருவின் இந்தியாவின் நிலை என்ன!

முதல் ஐந்தாண்டுத் திட்டம் முற்றுப் பெறாமலே முடிந்து விட்டது! இரண்டாவது ஐந்தாண்டுத் திட்டத்திலாவது சோஷலிச சமுதாயத்திற்கு ஆக்கம் காட்டுகிறார்களா? இல்லை!

அவர்கள் பேசுவதோ சோஷலிச சமுதாயம் அல்ல, சோஷலிச மாதிரி சமுதாயமாம்! சோஷலிசத்தில்தான் சமத்துவ சமுதாயம் காண முடியும்! ஆனால் மாதிரி சோஷலிசத்தில் எங்கே அதை எதிர்பார்க்க முடியும்! அதுதான் போகட்டும் அரசியல் சட்டத்தில் சோஷலிசம் நமது குறிக்கோள் என்றாவது ஒரு வரி உண்டா! ஆவடியிலே கூடி—ஆகாத திட்டத்தை வைத்துக் கொண்டு தகரக் கொட்டடிக்கின்றனரே தவிர பயன் ஏதும் ஏற்பட வழி இல்லையே!

தனியார் தொழிலுக்கும் சர்க்காருக்கும் போட்டி கிடையாது! அவர்கள் தங்கள் வளர்ச்சியில் கவனம் செலுத்தலாம்! கொள்ளை யடிக்கலாம்! அதற்கு குந்தகம் ஏற்பட்டுவிடாது! என்னும் கருத்துப்பட மந்திரி டி. டி. கே. பேசியிருக்கிறார் கல்கத்தாவிலே! தேசிய மயமாக்குதல் கிடையாது! வெளிநாட்டு மூலதனத்திற்கு வசதியும் அதற்கான உத்திரவாதமும் தரப்படும். என்றும் பேசி வருகிறார்! இவர் கருத்துப் படி நோக்கும்போது முதலாளித்வ வளர்ச்சி சீர்குலைக்கப்படாது என்பது தெளிவாகிறது. ஒருபக்கம்முதலாளியும், அடுத்த பக்கம் தொழிலாளியும் ஆனநிலை—ஏற்றத் தாழ்வு, மேடும்—பள்ளமும் இருக்கத்தான் செய்யும் என்பது புலனாகிறது.

இது எப்படி சமத்துவ சமுதாயமாகும்! அல்லது இந்தக் குறிக்கோளாவது சமத்துவ சமுதாயத்திற்கான அடிப்படையாகவாவது இருக்க முடியுமா!

நேரடியாக தனியார் முதலீட்டிற்கென்று இரண்டாம் ஐந்தாண்டுத் திட்டத்தில் 600 கோடி ரூபாய் ஒதுக்கப்பட்டிருக்கிறதாம்! இன்னும் மறைமுகமாக தொழில் மூலம் செய்யும் முதலீடு வேறு இருக்கிறது. இப்படித் தனியார் கொள்ளைக்கு வழிவகுத்தல் சோஷலிச சமுதாயத்திற்காக அடிகோலும்! இந்தக் கொள்கையில் நேரு பெருமான் அவர்கள் ‘நாம் சோஷலிசத்தை நோக்கி நடை போடுகிறோம்! என்றும் சோஷலிச சமுதாயம் காண்போம் வாரீர் என்றும் பேசி வருவது வேடிக்கை மாத்திரமல்ல விவேகமற்றதுங் கூட!

நல்லவனாகத்தான் நடக்கிறேன் என்று சொல்லிக் கொண்டே கோழியைத் திருடி பைக்குள் போட்டுக் கொண்டு வருவதைப்போல்தான் இருக்கிறது நேருவின் போக்கு! சமத்துவ சமுதாயம் என்று சொல்லிக்கொண்டே தனி உடைமையை வளர்த்து வருகிறார்!

நேருவைச் சுற்றிலும் பனியா பஜாஜ பிர்லாக் கூட்டங்கள் இன்றல்ல ஆதியிலிருந்தே தொடர்பு கொண்டிருக்கும் போது எப்படி மனம் ஒப்புவார்—அவர்களை உயரத்திலிருந்து கீழே கொண்டுவர! ஒரே ஒரு சம்பவத்தை மாத்திரம் நீங்கள் அறிந்தால் போதும். அவர்கள் எவ்வளவு சம்மந்தம் கொண்டவர்கள் என்பதற்கு!

1931-ல் லண்டனில் நடைபெற்ற வட்டமேஜை மகாநாட்டிற்கு காந்தியாரோடு ஜி. டி. பிர்லா என்ற பெரும் பணக்காரரும் சென்றிருந்தாராம்! பிர்லா காந்தியாரிடம் மகாநாட்டில் முதல் நாள் பேச வேண்டியதைக் கவனத்திற்கு கொண்டு வந்து குறிப்பு எடுத்துக் கொள்ள வேண்டினாராம்! காந்தியாரும் ‘நல்லது நானும் அப்படி நினைத்துப் பார்க்க முயற்சிக்கிறேன், என்று பதில் சொன்னாராம்!

அடுத்த நாள் மாநாட்டிற்கு இருவரும் காரில் கொண்டு செல்லப்படும் போது ‘நான் சொன்னபடி நீங்கள் குறிப்பெடுத்து வைத்திருப்பீர்கள் என்று நினைக்கிறேன்’ என்றாராம் பிர்லா! உடனே காந்தியார் ‘ஐயோ! நான் நினைத்தே பார்க்கவில்லையே! அது பற்றி ஒன்றும் கவனம் எடுக்கவில்லையே அதை நினைக்க வொட்டாதபடி எத்தனையோ எண்ண அலைகளல்லவா கெடுத்து விட்டது! சரி! கடவுள் எனக்கு உதவி செய்வார் என்றுகூறினாராம்! பிர்லா இப்படி எழுதி யிருக்கிறார் தம்மைப் பற்றியும் காந்தியைப் பற்றியும்!

இதிலிருந்து நமக்குப் புலப்படுவது பிர்லாக்கள் சுதந்திரப் போராட்டத்திலிருந்தே தொடர்பு கொண்டுள்ளனர் என்பதுதான்!

ஆனால் பக்கத்துச் சீனா சிரிக்கிறது இந்தியாவைப் பார்த்து.

சோஷலிசம் காணுவதற்காக படிப்படியாக முதலாளிகளை ஒழித்தும், சில துறைகளில் தனிப்பட்ட தொழில் துறை உள்ளவரிடம் அரசாங்கம் சேர்ந்தும், இன்னும் சில விடங்களில் முதலாளிகளைப் பெயரளவில் வைத்து அவர்களது கொள்ளை உரிமை போன்றவைகளைக் கட்டுப்படுத்தியும் வருகிறது! சோஷலிசம்அமைக்க எப்படியும்—எந்த முறையிலும் தனி உடைமையை ஒழிக்க கடும்பாடுபட்டு வருகிறது சீனா!

சமுதாயத்துறையில் புரட்சிகர மாறுதலைச் செய்தது போலவே இத்துறையிலும் செயலாற்றி வருகின்றனர்.

விடுதலை அடைந்த ஆறு ஆண்டுகள்தான் ஆகின்றன. அதற்குள் இத்தகைய மகத்தான மாற்றங்கள்!

இந்தியா விடுதலை பெற்று எட்டு ஆண்டுகள் ஆகிவிட்டன! சீனாவிற்கு



# மேலைய நாடுகளில் தமிழரைப் பற்றி தவறான கருத்துக்கள்!

## ஆரியவெறி கொண்டவர்களின் நேர்மையற்ற போக்கு

## இந்திய தூதப் பணியாளர்களும் இவ்வநீதிக்கு தூபம் போடுவதா?

டாக்டர் மு. வரதராசனார் — பாண்டியன் அறிக்கை

சிக்கா கோவிலிலுள்ள காட்சிச் சாலையொன்றில்தமிழர்களைக்குறித்து தவறான கருத்து கொண்ட ஒரு விளக்கம் அமைந்திருப்பதைக் கண்டிக்கும் வகையில் தமிழ்க் கலை மன்ற செயலாளர்களான டாக்டர் மு. வரதராசனார், திரு. ம. வ. பாண்டியன் ஆகியோர், கீழ்க்கண்ட அறிக்கையை விடுத்துள்ளனர்.

சிக்காகோவிலுள்ள இயற்கை வரலாற்றுக் காட்சிச் சாலையில் தமிழர்களைக் குறித்துத் தவறான கருத்துக்கொண்ட ஒரு விளக்கம் அமைந்திருப்பதைப்பற்றி, ‘தமிழ்நாடு’ தலையங்கத்தில் கண்டித்து எழுதியது பொருத்தமே, தலையங்கத்தில் கூறியபடி வேண்டுமென்றே தமிழர்களை அவமதிப்பதற்காக இவ்விளக்கம் கொடுக்கப்பட்டிருக்கிறதென்று யாருங் கூற முடியாது. அறியாமையின் பாற் பட்ட தவறான கருத்தென்றே கொள்ள வேண்டும். ஆகவே இவ்வகையான அறியாமை பிறநாட்டாரிடம் இருப்பதற்குக் காரணம் என்ன என்று ஆராய்ந்து அதை நீக்க முயல வேண்டும். இது தமிழர் கடமை.

பாரதியார் சொன்னபடி நமக்குள்ளேயே வீண் பெருமை பேசுவதன்றி அவ்வாறு பெருமிதப்படுவதற்குத் தக்க காரணமுண்டு என்று உலகத்தாருக்கு அவர்கள் ஒப்புக்கொள்ளும் வகையில் எடுத்துக் காட்டத் தமிழர் யாரும் தகுந்த முயற்சி எடுக்கவில்லை. கால்டுவெல் என்ற ஆங்கிலப் பெருமகனார் நூறு ஆண்டுகளுக்கு முன் இத்துறையில் செய்த பெருந் தொண்டிற்குப் பின் மதிக்கத்தக்க முயற்சி வேறு யாரும் எடுத்தாரில்லை.

அன்றியும், தமிழரல்லாத இந்தியர்களும், தமிழரிலேயே தமிழ்ப் பற்று சிறிதுமில்லாத வகுப்பாரும், வடமொழியைப் பற்றியும் ஆரியப் பண்பாட்டைப் பற்றியும் சென்ற நூற்றைம்பது ஆண்டுகளாகப் பல துறைகளிலும் மேனாட்டார் ஒப்புக்கொள்ளும் வகையில் ஆராய்ச்சிகள் செய்து, மேனாட்டுப் புலவர்களையும், மேனாட்டுப் பல்கலைக்கழகங்களையும் அவ்வாராய்ச்சிகளில் ஈடுபடும்படி தூண்டி, ஆங்கிலத்தில் ஆயிரக்கணக்கான நூல்களையும், பல இதழ்களையும் வெளியிட்டிருக்கின்றார்கள். அவர்களில் சிலர் ஆரிய வெறிகொண்டு உண்மையை மறைத்தும், திரித்தும் தமிழ் மொழிக்கும் தமிழ்ப்பண்பாட்டிற்கும் இழிவு தரும் கருத்துக்களைப் பரப்பியிருக்கிறார்கள். அக்கருத்துக்களைப் போதிய சான்றோடு மறுக்கத் தமிழர் முயற்சி எடுக்காததால் உலகத்தார் பெரும்பாலும் ஒத்துக்கொண்டார்கள்.

இந்நிலை மாறவேண்டுமானால் தமிழர்களே பெருமுயற்சி எடுக்க வேண்டும். பிறரை நம்புவதில் பயனில்லை. பிற நாட்டிலுள்ள இந்தியத் தூதப் பணியாளர் பெரும்பான்மையும் ஆரியப் பற்றுள்ளோர், அவர்கள் முழு மனதுடன் தமிழர் இழிவைப் போக்கவோ, தமிழர் பெருமையைப் பரப்பவோ முயல்வார்களென்று நாம் எதிர்பார்க்க முடியாது.

ஆகவே செயலளவில் தொண்டு செய்யும் ஆற்றலும் வாய்ப்புமுள்ள தமிழ்த் தலைவர்கள் இத்துறையில் இறங்கி, வேண்டுவன செய்தால் மட்டுமே உலகத்தார் தமிழையும், தமிழரையும் மதிக்கும் நிலைமையேற்படும். தவறான கருத்துக்கள் அழிந்தொழியும்.

இங்கு ஒன்று குறிப்பிடத்தக்கது, தமிழர் இலக்கியத்தைப் பற்றி சிறப்பாகக் குறள், சிலப்பதிகாரம், போன்ற நூல்களைப் பற்றி விரிவான ஆராய்ச்சிகள் செய்யப்பட்டிருக்கின்றன. மொத்தத்தில் இவ்விலக்கிய ஆராய்ச்சிகள் தமிழருக்கு மட்டும் பயன்படும். ஏனெனில் ஒரு மொழியிலுள்ள இலக்கியச் சிறப்பு அம்மொழி தெரிந்தோருக்கு மட்டும் புலப்படும். ஒரு மொழியின் இலக்கியத்தைப் பிறிதொரு மொழியின் இலக்கியத்தோடு ஒப்பிட்டுப் பார்ப்பது எளிதன்று. ஆதலால் தமிழிலக்கியத்தின் சிறப்பைத் தமிழ் தெரியாதவர்களிடம் நிலை நாட்டுவது எளிதில் இயலாது.

ஆனால் தமிழின் நிகரற்ற ஒலியமைப்பு, சொல்லமைப்பு, இலக்கண அமைப்பு. தமிழரின் கலை, பொருளாதாரம், அரசியல் முதலிய பலதுறைகளில் ஒப்பியல் முறை (Comparative method) மூலமும், வரலாற்று முறை (Historical method) வழியும் இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முன்னரே தமிழர் எவ்வாறு சிறப்பான முன்னேற்றத்தை யடைந்திருக்கிறார்களென்பதையும் நிலைநிறுத்த முடியும். அவ்வாறு நிலைநிறுத்த மேல்நாட்டார் கையாளும் தற்கால ஆராய்ச்சி முறைகளை (Modern scientific methods) நாம் பின் பற்ற வேண்டும், இந்நோக்கத்துடன் தகுந்த நிலையங்கள் நிறுவி தமிழ்ப் புலவர்களையும் மேல் நாட்டுப் புலவர்களையும் தமிழ் ஆராய்ச்சிகளில் ஈடுபடுத்தி ஆராய்ச்சி முடிவுகளை ஆங்கிலத்தில் நூல்கள் வாயிலாகவும் இதழ்கள் வாயிலாகவும் வெளியிட வேண்டும்.

நிற்க, தமிழ்க்கலை மன்றத்தார்கள் (Academy of Tamil Culture) தமிழ்மொழி, தமிழ்ப் பண்பாடு இவற்றின் சிறப்பை உலகறியப் பரப்ப வேண்டுமென்ற நோக்கத்துடன் ‘தமிழ்க் கலை’ (Tamil Culture) என்ற ஆங்கில முத்திங்கள் இதழை வெளியிட்டு வருகிறார்கள் இவ்வகை முயற்சிகள் தமிழ்நாட்டில் பெருக வேண்டும். அம்முயற்சிகளுக்குத்தமிழர்களனைவரும்சொல்லளவோடு நில்லாமல் செயலளவிலும் ஆதரவு கொடுக்க வேண்டும் அதுவே தமிழினப் பற்று அவர்களின் உள்ளத்தில் வேரூன்றியுள்ளது என்பதற்குச் சான்றாகும். அத்தகைய நல்ல பற்று, உறுத்து நாடெங்கும் வளர்ந்தால்தான், மேற்குறித்தது போன்ற தவறான கருத்து வெளி நாடுகளில் பரவாமல் தடுத்தல் இயலும்.

‘யாதும்ஊரே யாவரும் கேளிர்’ என்று உலக ஒற்றுமை குறித்து ஈராயிரம் ஆண்டுகளுக்கு முன்னமே முழங்கிய தமிழர்கள், இன்று நாகரிகமற்ற, காட்டுமிராண்டிகளோடு ஒருங்கே கருதப்படும் இழிநிலையை எண்ணியேனும், ஆக்கப் பணிகளில் முனைந்து ஒன்றுபட்டுச் செயலாற்றுவது கடமையாகும்.

## அண்ணன் தம்பி ... தொடர்ச்சி

அண்ணனாகி இருக்கிறது — விடுதலை பெற்றதில்! இங்கு நாம் காண்பது இன்னும் சமத்துவத்திற்கு வழி இன்மையையே!

இந்தியாவின் எட்டு ஆண்டிற்குள் முதலாவது ஐந்தாண்டுத் திட்டம் வேறு செயலாற்றப் பட்டிருக்கிறது. முதல் ஐந்தாண்டுத் திட்டத்தில் சோஷலிசம் என்ற நினைப்பே எழவில்லை! உணவுப் பெருக்கத்திற்குத்தான் முக்கியத்துவம் செலுத்தப்பட்டது என்கின்றனர்—அது திருப்திகரமாகத் தெரிவதால்!

உண்மையில் அதையாவது வெற்றி பெறச் செய்திருக்கிறார்களா என்று கேட்டால் இல்லை என்றுதான் சொல்ல வேண்டும்! ஏனெனில் வானத்தின் கருணையினால் பிரச்னை ஒருவாறு அடங்கி இருக்கிறது. அது பொய்த்து விட்டால்தான் இவர்களின் உணவு உற்பத்தியின் தன்னிறைவின் லட்சணம் புலப்படும்.

இதைத் தவிர வேறு ஏதாவது வளர்ச்சி—நிறைவு ஏற்பட்டது என்று அவர்கள் விரலைக்கூட மடக்க முடியாது முதலாம் ஐந்தாண்டுத் திட்டம் முடிவதற்குள்ளே—அதை அறை குறையாக நிறுத்திவிட்டு 2-ம் ஐந்தாண்டுத் திட்டத்தைப் பற்றிக் கனவு காண ஆரம்பித்து விட்டனர். முதல் ஐந்தாண்டுத் திட்டத்திலே கோணல் ஏற்பட்டு விட்டது. இனி இரண்டாவது திட்டத்தில் எப்படியோ பொறுத்திருந்து தான் பார்க்க வேண்டும்!

சீனாவில் ஆண்டுகள் ஆறே ஆயினும் முதல் ஐந்தாண்டுத் திட்டம் வகுக்கப்பட்டு இரண்டு ஆண்டுகளே ஆகின்றன 1953-54 ஆகிய இரண்டு ஆண்டுகளில் அவர்களின் வளர்ச்சியின் வேகம் எப்படி இருக்கிறது என்பதைக் கவனிக்கும்போது நமக்கே வியப்பை அளிக்கிறது! திட்டமிட்ட காலத்திற்குள்ளே அதை முடித்துவிடும் நோக்கம் தென்படுகிறது.

1953—54-ம் வருடங்களின் இயந்திர உற்பத்தி, எதிர்பார்த்த அளவை விட அதிகமான அளவு உயர்ந்திருக்கிறது. 1952-ம் வருடத்தை விட 53 7 சதவீதம் உற்பத்தி அளவு 1954-ம் ஆண்டில் அதிகமாகி இருக்கிறது! இதில் இரும்பு 56 சதவீதமும் எஃகு 65 சதவீதமும் எலக்ட்ரிக் பவர் 51 சதவீதமும், கரி 26 சதவீதமும், சிமெண்ட் 61 சதவீதமும், மரம் 111 சதவீதமும் பருத்தி ஆடைகள் 37 சதவீதம் முன்னைவிட அதிகமாக பயன்படுத்தப்பட்டு தொழில்துறை வளர்ச்சி அடைந்திருக்கின்றன!

விவசாய உற்பத்தியில் 1953-ல் 1952ஐ விட 14.4 சதவீத வளர்ச்சியும், 1954ல் மேலும் 9.4சதவீத வளர்ச்சியும் தென்படுகின்றன இந்த இரண்டு ஆண்டுகளில் எதிர் பார்க்கப்பட்ட வளர்ச்சி 11,9 சதவீதமே!

மொத்தத் தொகையில் 32 சதவீதம் இரண்டு ஆண்டுகளில் செலவழிக்கப்பட்டிருக்கிறது! வாணிப வளர்ச்சி 1952ஐ விட 1954-ல் 41 7 சதவீதம் முன்னேற்றம் ஏற்பட்டிருக்கிறது.

ஆனால் இங்கோ...!! இந்தியாவோ சோஷலிசத்தைக் கொண்டுவரக் கூட முடியவில்லை—நேருவால்! ஆனால் ஒன்றுக் கொன்று திரித்துப் பேசுவதை இன்னும் விடவில்லை! நிலைமை இப்படியிருக்க இங்குபோல் வேறு எங்கும் முயற்சித்ததில்லை என்று வீண் பெருமை பேசுகிறார்!

எதை எப்படிப் பேசினால் தான் என்ன! அண்ணன் தம்பியாகிறான் என்பது மாத்திரம் உண்மை!

## “மதப் பாடம்” மண்ணைக் கவ்வுகிறது!

திருப்பதியில் கடவுள் நெறி மதத் துறைக் கல்விக்கான தனிக்கல்லூரி ஏற்படுத்த வசதி யில்லை யென திருப்பதி—திருமலை கோயில் நிர்வாகி திரு. அண்ணாஜி ராவ் சென்ற வாரம் நடைபெற்ற வெங்கடேசுவர இலக்கிய கலைக்கல்லூரி, இலக்கிய — வர்த்தகக் கலையியல் கழகத் துவக்க விழாவின் போது தெரிவித்திருக்கிறார்.

மதக்கல்லூரி ஏற்படுத்தும் யோசனையை ஏற்றுக் கொண்டால், அதனால் ஏற்படும் தொல்லைகளை எல்லாம் அவர் எடுத்துக் காட்டியதோடு, மதக் கல்வி பயின்றோருக்கு எதிர்காலத்தில் வேலை கிடைக்காதென்பதே இப் பிரச்னையில் பெருங் கவலையா யிருப்பதால் மதத் துறைக்கான தனிக்கல்லூரி ஏற்படுத்துவது குறித்து ஆரதிர யோசிக்க வேண்டியிருக்கிறது. வேண்டுமானால் பி. ஏ. வகுப்பில் மட்டும் மதப் பாடம் கற்பிக்கச் செயலாம் என்பது பற்றியே இப்போது யோசிக்கப்படுவதாகவும் தெரிவித்தார்.

# கேள்வி? பதில்

**எம். நாகராசன், மதுரை**

**கே : தமிழக—ஆந்திர மந்திரிகளின் சம்பாஷணை முறிந்து விட்டதே—சித்தூர் எல்லைப் பிரச்னைப் பற்றி இனிமேல் தி. மு. கழகம் என்ன செய்யப் போகிறது. ?**

ப : ஆந்திர — தமிழக அமைச்சர்களின் பேச்சுவார்த்தை அடியோடு முறிந்து விட்டதாகத் தெரியவில்லை. ஆந்திர அமைச்சர்கள் தாங்கள் தெளிவு பெற இத்திங்கள் இறுதி வரை, தவணை கேட்டிருக்கிருர்களாம்! எனவே இந்நிலையில் அவசர குடுக்கைகள் போல ஏதாவது வம்பு பேசுவது அப்பிரச்னையில் தமிழர்களுக்குள்ள உரிமையை தமிழர்களே கெடுத்ததாகும், எனவே இத்திங்கள் இறுதி வரைதான், பொருத்திருந்து பார்ப்போமே-வேண்டுமானல் அதுவரை ஆந்திர அமைச்சர்கள் தெளிவு பெறும் வகையில் ஆதாரங்களை எடுத்துக் காட்டி வருவதுதான் முறையாகும்,

எனவே தமிழக—ஆந்திர எல்லைப் பிரச்னையில் தி, மு. கழகம், தமிழகத்தின் உரிமையை சிறிதும் விட்டுக் கொடுக்காது. ஆனல் அதற்காக வீண் வம்புகளைப் பேசித் திரியும் செயலிலும் ஈடுபடாது, அப்பிரச்னையில் வெற்றி பெருவதற்கான நடவடிக்கைகளில் ஈடுபட வேண்டிய சூழ்நிலை உருவாகும்போது தி. மு, கழகம் தனது கடமையை இனிது நிறை வேற்றும்.

ஃ

**பா. கமலக் கண்ணன், கல்லக் குறிச்சி**

**கே : அடுத்த பொதுத் தேர்தலில் பெரியார் ஈ வே ரா உங்கள் கண்ணீர்த்துளி கட்சியை எதிர்த்தால் என்ன செய்வீர்கள் ?**

ப : அய்யா பன்னீர்த்துளி கட்சியாரே நீங்கள் ஒன்றும் அந்த சமயத்தில் எங்களுக்குத் துணைவர வேண்டாம். நீங்கள்பன்னீர்த் துளிகளுக்கேபதிகம் பாடிக்கொண்டிருங்கள் தேர்தலில் போட்டியிடுவதென்பது, மாநில மாநாட்டில் முடிவு செய்யப்பட்ட பின் உமது கேள்வியைக் கேளுங்கள். அதற்குள்ளாக ஏன் அவசரசாமி மாடலில் குதிக்கிறீர்களே. இருதயக் கோளாறு வந்து விடப் போகிறது!

ஃ

**டி. மதிவாணன், தஞ்சை**

**கே : அய்யா அஞ்சா நெஞ்சனே, பெரியார் காங்கிரசைத்தான் ஆதரிக்க வேண்டும் என்று அடிக்கடி பிரசங்க மேடைகளில் பேசுகிருரே-அதைவிடக் காங்கிரஸிலேயே சேர்ந்து விடக் கூடாதா ?**

ப : தோழரே—என்ன வம்புக்கிழுக்கும் கேள்வியைக் கேட்கிறீர்கள். அய்யா அவர்களையே கேட்பதுதானே இந்தக்கேள்வியை. ஆமாம் உமது ஆசைப்படி பெரியார் காங்கிரசில் சேருவதாய்வைத்துக்கொள்ளுங்கள். காங்கிரஸ் தலைவரும், முதலமைச்சர் மற்றுமுள்ள அனைவரும் பெரியார் சொல்லுவதைப் போல நடப்பார்களா ? பெரியார் தானே காங்கிரஸ் கட்டு திட்டங்களுக்கு அடங்கி நடக்கவேண்டி யிருக்கும். அதை விட சமயோசிதம் போல "காங்கிரசுக்கு ஆதரவு" தரலாமல்லவா !

இதோ பாருங்கள்—இப்போது நடைபெற்ற நகரசபைத் தேர்தல்களையே எடுத்துக் கொள்ளுங்கள். "பார்ப்பானே வெளியேறு" என்று முழு மூச்சாகக் கூறிக்கொண்டு தி. மு. கழகத்தினரை பார்ப்பன தாசர்கள் என்று சாடிக்கொண்டுவரும் திராவிடர் கழகம் ஈரோட்டு நகரசபைத்தேர்தலில் ஒரு பார்ப்பனரை ஆதரித்திருக்கிறது.

திருச்சியில் காங்கிரசை எதிர்த்து நின்ற டாக்டர் மதுரம் அவர்களுக்கு திராவிடர் கழகம்முழு ஆதரவு தந்திருக்கிறது சென்னை மயிலையில் காங்கிரஸ் அபேட்சகராக நின்ற தோழியர் அனந்தநாயகி அம்மையாருக்கு திராவிடர் கழகம் ஆதரவு தந்திருக்கிறதாம். ஏனெனில் இந்த அம்மையாரை எதிர்த்து நின்ற சோஷலிஸ்ட் கட்சி அபேட்சகர் ஒரு பார்ப்பன அம்மையாராம் !

எப்படியிருக்கிறது கதை! திராவிடர் கழகம் காங்கிரசுக்கு ஆதரவு தருவதென்பதில் என்வளவு உயர்ந்த தத்துவம் இருக்கிறது பார்த்தீர்களா !

பாப்பனனே வெளியேறு என்று சொல்பவர்கள் பார்ப்பனரை ஆதரிக்கலாமா யென்ருல், அதற்கு அலாதி தத்துவார்த்தம் கூறுவர் ! இதெல்லாம் பெரிய இடத்து விஷயம் !

ஃ

**எம். ஆர். கோவிந்தன், வடசென்னை**

**கே: தமிழ்நாடு காங்கிரஸ் தலைவர் கக்கன் மீது நம்பிக்கையில்லாத் தீர்மானம் நிறைவேறி விடுமா ?**

ப : தோழர் கக்கன் அவர்களைத் தலைவராக்கியதாகச் கூறப்படும் முதலமைச்சர் காமராசர் அவர்களே — இப்பிரச்னையில் இயற்கைப்படி நடப்பது நடக்கட்டும் என்று கூறியிருக்கும்போது நீங்கள் ஏதோ ஆருடம் கேட்க கிளம்பிவிட்டீர்களே !

ஃ

**டி. செங்குட்டுவன், மயிலை**

**கே : இந்தியாவிலே மிகப் பெரிய தலைவர் யார் ? கட்சி வித்தியாசம் இல்லாமல் பதில் சொல்லுங்கள் ?**

ப : நேரு சர்க்கார், தர்பார் நடத்தும் இப்போது பணசக்தி! வருங்காலத்தில் ஜனசக்தி

ஃ

**எஸ் கே. ராசன், தஞ்சை**

**கே : தென்னுட்டில் ஜனங்களுக்கு அறிவு இருக்கிறது. ஆனல் ஒற்றுமையில்லை. இது எப்போது ஏற்படும்?**

ப : தி. மு. கழகம் அந்த அறிவை வளர்க்கும் பணியைத்தான் செய்து வருகிறது. உங்களைப் போன்றவர்களும் அதற்கு துணை செய்தால் விரைவில் உமது எ்ண்ணம் நிறைவேறும்.

ஃ

**கே. எம். மணி, தாம்பரம்**

**கே : சென்னை ராஜ்ய மந்திரிகளில் நல்லவர்கள் யார்?**

ப : எல்லோருமே நல்லவர்கள் தான். கொள்கையளவிலே தான் எங்களைப்போன்றவர்களுக்கு வேறு பட்டவர்களாக யிருக்கிருர்கள்.

ஃ

**எஸ் மாணிக்கவாசகம், சிந்தாதிரிப்பேட்டை**

**கே : குத்தூசி இல்லாவிட்டால் தி. மு. கழகமே உண்டாகியிருக்காதாமே, அப்படியிருக்க அந்தக் குத்தூசியாரை தி. மு. கழகத்தார் கிண்டல் செய்வது சரியா?**

ப : அய்யர்.மாணிக்கவாசகனுரே, இதைப் பெரியார் அவர்களிடம் தெரிவித்து விடப் போகிறீர்கள். நிற்க குத்தூசியாரோ —குத்தாத ஊசியாரோ யாரையும் தி. மு. கழகத்தார் கிண்டல் செய்யவில்லை, நீங்கள் குறிப்பிடும் ஊசிகளுக்கு சில சமயங்களில் துருப்பிடித்து விடுவதால், அதன் காதுகள் ஒடிந்து விடுகின்றன. எனவே உங்களைப் போன்ற தோழர்கள் அந்த ஊசிகளை ஒழுங்காக வைத்திருக்க அக்கரை எடுத்துக்கொள்ளுங்கள்.

ஃ

**எம். நமச்சிவாயம், இராயபுரம்**

**கே. சென்னைக்கு அடுத்த மேயர், யார் ?**

ப : ஒரு அய்யர் !

ஃ

**ஆர். வெங்கடாசலம் கோவை**

**கே : தி. மு க. மாநில மாநாட்டுக்கு நிதி அனுப்ப வேண்டிய விலாசம் என்ன ?**

ப : தோழர். இரா, நெடுஞ்செழியன், M. A., பொதுச் செயலாளர், தி. மு. கழகம் அறிவகம் இராயபுரம், சென்னை-13

ஃ

**எஸ். காளியப்பன், திருச்சி**

**கே : தி. மு, கழகம் தொழிற் சங்கங்களை எந்த விதம் நடத்தப்போகிறது ?**

ப : மாநில மாநாட்டில் இது குறித்து விவாதித்து முடிவு செய்யப்படும். அப்போது உங்களுக்கும் மற்றும் அனைவருக்கும் தெரிவிக்கப்படும்.

ஃ

**பி. ஆறுமுகம், சூளை**

**கே : அய்யா அஞ்சா நெஞ்சனே உங்கள் கட்சியில் எத்தனைப்பேர் கலப்பு மணம் செய்து கொண்டவர்கள் ?**

ப : எனக்கு திட்டவட்டமாக எண்ணிக்கைத்தெரிவிக்க இயலாது. ஆனல் எனக்குத் தெரிந்தவரை 48 பேர்.

ஃ

**வி சுந்தரம் ஸ்ரீரங்கம்**

**கே : சென்னை கவர்னர் அடிக்கடி பெண்களைப்பற்றியே பேசிவருகிருரே— ஏன்?**

ப : பிரம்மச்சாரியாக இருந்து வரும் முதலமைச்சர் காமராசர் அவர்களை எப்படியாவது தமது பதவி காலத்திற்குள் மாப்பிள்ளையாக்கி விடுவதென்ற எண்ணத்தால் இப்படி கவர்னர் பேசிவரக்கூடும் என்று எண்ணுகிறேன், ஏனெனில் தற்போதுள்ள அரசியல் சட்டத்திற்கேற்ப கவனருக்கு உருவான வேலையொன்றும் இல்லையல்லவா, ஆதலால் இந்த வேலையில் (ஐந்தாண்டுத் திட்டம் போல) கவர்னர் இறங்கியிருக்கிருர் என்று யூகிக்கிறேன்

ஃ

**கா. ரகுநாதன், நெல்லை**

**கே : கோவை தொழில் நிபுணர், எந்தக் கட்சி ?**

ப : பொதுவாக காங்கிரசின் போக்கு அவருக்குப் பிடிக்காது, ஆனல் அவர் எந்தக் கட்சியிலும் உறுப்பினராக யில்லையென்றே கூறப்படுகிறது.

ஃ

**டி. வீராசாமி, திருவல்லிக்கேணி**

**கே : இந்தியப் பிரதமர் நேருஜி அடுத்த படியாகவும பிரதமராக இருப்பாரா ?**

ப : பொதுத் தேர்தலுக்குப்பிறகு ஏற்படும் சூழ்நிலையைப் பொறுத்தே அவர் பிரதமர் பதவியில் அமரும் பிரச்னை முடிவுக்கு வரக்கூடும்,

ஃ

**எம். மாடசாமி, விருதுநகர்**

**கே : அடுத்த தேர்தலில் தி. மு. கழகம் எத்தனை பேரை நிற்கவைக்கும் ?**

ப : மாநில மாநாட்டில் தேர்தலுக்கு நிற்பதா—இல்லையா என்ற பிரச்னை முதலில் முடிவு தெரியட்டும்.

✱

